


ர் 15]    1964-௵ ஆடி-மீ 1 ௳    16-7-64    [இதழ் 7

தனிப் பிரதி 13 நயா பைசா    வருடச் சந்தா ரு. 1½

## உள்ளுறை

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 15 | குரோதி-ஞு ஆடித் திங்கள் 1-ம்வ [16-7-64] | இதழ் 7

# தில்லைச் சிவகாமியம்மை யிரட்டைமணிமாலை

## ( கட்டுரை 3 )

தொண்டைமண்டலாதீனம் மகாசந்நிதானம்

**சீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் அவர்கள்**

ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் மடாலயம்,

காஞ்சிபுரம்.



எம்பிராட்டி, தான் பெருது பெற்ற மக்களாகிய உயிர்கட்கும் பிற உயிர்கட்கும் சிவாகம விதிப்படி சிவபூசைபுரியும் முறைமையைக் கற்பித்தருள்வாள் ஆகி, அது செய்யத் தொடங்கினுள். அப்பூசைக்கு ஏகும் முன்னர், தேவி தன் பாங்கியர்க்கு வெவ்வேறு கட்டளை இட்டருளினள். அவ்வக்கட்டளையைப் பாங்கியர் கூட்டம் ஒவ்வொன்றும் செவ்விதின் ஆற்றியது.

அநுட்டானத்திற்கு ஒரு கேணியும் ஆண்டவன் திரு வேகம்பன் அபிடேகத்திற்கு ஒரு கேணியும் உண்டாக்கினர் பாங்கியர். ஆற்றங்கரையில் மலர்களும் பச்சிலைகளும் பழங் களும் நிறைந்திருக்கும் மயிலை, வில்வம், பலா முதலிய மரங்கள் பல கொண்டுள்ள பூங்காக்களை வைத்தனர் சிலர். சந்தனச் சாந்தும் களபகத்தூரியும் பச்சைக் கருப்பூரமும் குங்குமப் பூவும் மற்றும் ஆகிய பல மணமிகு பொருள்களைச் சிலர் கொண்டு வந்தனர். ரத்நாபரணம் விலையுடைய அரியபரி வட்டங்கள் முதலியவற்றைக் கொணர்ந்தனர் சில்லோர்.

"திருமலி யோவியப் பட்டும் தீபத்தியன்ற வெண்பட்டும்
குருமலி பாசிலைப் பட்டும் கோபம்நிகர்த்த செம்பட்டும்
உருவுடை மாழையம் பட்டும் ஒளிர்தருநீல்நிறப் பட்டும்
தருவுதவும் பலபட்டும் தந்தனரால் ஒருசாரார்."

தேவியின் திருவடி மலரில் விழுந்து தொழுது எழுந்து, 'நான் முந்திச் செய்வேன்' என்னும் மொழியைத் தனித்தனி சொல்லித் தோழியர் எல்லாரும், தம் தலைவியின் அடித் தொழிலில் மிக்க விரைவுடையவராய் முயன்று, தமக்கு இட்ட பணிகளை, நன்கு செய்து முடித்தனர். கோயிலுக்கு வடக்கிலும் தெற்கிலும் ஒவ் வொரு கேணியை உளதாக்கிய உமாபத்திரையும் கீர்த்திமதியும் அக்கேணி நீரில், கங்கை காளிந்தி முதலிய புண்ணியப் புனலை நிரைத்து வைத்தனர். அவ்விரண்டற்கும் உயிர்கள் உழலும் பிறவிப் பெருங்கடல் மிகச் சிறிதளவுந் தோற்றம் தாராதழியும்.

சிலர் தோழியர் திருவேகம்பர்க்குத் திருவமுதாக்கும் பொருட்டுத் தென்கிழக்கில் ஒரு கேணி உண்டாக்கி, அழகிய மடைப்பள்ளியை அமைத்தனர். இப்போது அது 'மடப்பள்ளி' என்று குறிக்கப் பெற்றுள்ளது. அது மலப்பழம் என்ற உலக வழக்கையொட்டியது போலும்.

வேகவதி நதிக்கரை யோரத்திலே 'அம்பிகாவனம்' என்னும் பெரிய மலர்க் காடுகளை வைத்து வளர்த்தனர் சிற்சிலர். சிலர் வாழை மரம், பாக்கு மரம் செங்கரும்பு முதலிய வற்றைத் தூண் தொறும் சேர்த்துக் கட்டி ஒளி வீசும் தெளிமணி மாலைகளைத் தொங்கவிட்டனர். சிலர் மணமலர் மாலைகளைச் சரம்சரமாக

விட்டுப் பல சித்திரவிதானத்தை மேற்கட்டித் திருமணிக் கோயிலை அழகு செய்தனர். புனுகு அப்பி, மகரந்தப்பொடி சேர்த்துக் கலந்த பனிநீர் தெளித்து, அகிற்புகைத்து, பொன்னைப் பொடித்துக் கரைத்துப் பொற்புமிக்க திருமாளிகைச் சுவர்களைப் பொன்மயமாக்கினர் சிலர்.

வீறும்விரைப் பாளிதங்கள் வெறுவியவல்சி அக்காரச்
சோறுபுளிந்தயிர்ச் சொன்றி துப்புடையேனைப் புழுக்கல்

முதலிய நால்வகை யுண்டியை ஆறுசுவைத் திறமும் அமையச் சமைத்து வைத்தனர் சிலர்.

சிலர் சூட்டு, இண்டை, கண்ணி, தொங்கல் முதலிய பற்பல மலர்த்தொடைகளைத் தக்கமணம் கூட்டிப் பனிநீர் தெளித்துச் செம்பொற்குடலையில் நிறைத்து வைத்தனர்.

செம்பொற் குடங்களில் தெய்வ மந்திரங்களை ஓதிப் பொன்னுடை கொண்டு வடித்தெடுத்த தண்ணீரைப் பெரிய அண்டாக்குள் நிறைத்தனர்.

பூஜா பாத்திரங்கள், பழவகை, காய்வகை, பூவகை, இலை வகை முதலிய எல்லாவற்றையும் தூய நிலையில் நிறைத்து வைத்தனர்.

பாற் குடம், நெய்க் குடம், தேன் குடம், கருப்பஞ்சாற்றுக் குடம், தயிர்க் குடம, தேவாமிர்தக் குடம் எல்லாம் அங்கு வந்து சேர்ந்தன.

நவரத்ந கிரீடம், குதம்பை, பொன்னணி, பட்டம், தோளணி, விரலாழி, கடகம், கண்டசரம், முதலியன மிகுந்து, விளங்கக் குவிந்தன.

சோடசோபகாரத்திற்குரிய கண்ணாடி, குடை விசிறி முதலியனவும் திருநீறு முதலியனவும் உரிய முறையில் அமைந்தன.

இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால் நின்றனர். இருக்கொடு தோத்திரம் இயம்புவோர் ஒருபால் விளங்கினர். துன்னிய பிணமலர்க்கையினர் ஒருபால் துலங்கினர். சென்னியில் அஞ்சலி கூப்பினர் சேடியர் முதலோர். தேவரும் முவரும் யாவரும் கூடினர், ஆடினர், பாடினர், அம்மையின் அருள் வரவை நாடினர்.

எம்பெருமாட்டி, ஒரு பெருமண்டபத்தினின்று வெளிப்பட்டு, 'உமாபத்திரம்' என்னும் பெயருள்ள கேணி (கீழ்நீர் என்றதன் மருஉ)க்குச் சென்று சேர்ந்து, பார்க்குமிட மெங்குமொரு நீக்கம் அற நிறைகின்ற பரிபூரணுநந்தத்தில் முழுகுவதாக எண்ணிப் பரசிவன் பாதார விந்தத்தைத் தியாநம் செய்து, விதிப்படி ஆடி, தோழியர் எடுத்துத் தந்த திருவொற்ருடையில் திருமேனி யீரத்தை மட்டும் போக்கி, எல்லாவுயிர்க்கும் பொதுவான திரு வுள்ளத் தீரத்தை நிறைத்து,

"தேசிகப் பட்டிரன் டுடுத்துத் தீவினை
ஆசிரித் தருளும்நீ ருகம் எங்கணும்
பூசிமுப் புண்டரம் பொறித்துக் கண்டிகை
நேசமுற் றணிந்துசெய் நியமம் முற்றியே,"

"காவலர் பூசனை புரியும் காதலான்
மேவர வேண்டுவ கொண்டு மெல்லியற்
பாவையர் புடைவரப் படர்ந்தி ரண்டெனும்
ஆவரணந்தனை அணுகி னுள் அரோ."

சங்குகள், ஊது கொம்புகள், தாரைகள், எக்காளங்கள், திருச்சின்னங்கள், வீணைகள், புல்லாங்குழல்கள் பிற இசைக் குழல்கள், பேரிகைகள், முரசங்கள், திண்டிமங்கள் கடலுடைந் தாற்போல முழங்கின.

தேவர்கணங்கள் ஆட்டமும் பாட்டமும், மகளிர் கூத்தும் ஏத்தும், மறையவர் முனிவர் வேதபாராயணமும் சூழ எழுந் தருளினுள் நம் தாய் ஆகிய சிவகாமி (காமாட்சி, விசாலாட்சி, மீனுட்சி, கமலாட்சி) சிவபூசை செய்ய.

"ஐங்கரப் பிள்ளையை நிருதி யாசையிற்
செங்கைவேல் இளவலை உலவைத் திக்கினும்
உங்குறு பூசையின் உவப்பச் செய்துபோய்
மங்கல நந்திவாழ் வாய்தல் நண்ணியே."

துவாரபூஜை செய்து, ஒருமா விற் பெருமானை இருவிழி மலரும் பெருகு நீர்த்துளியொடும், உச்சிமேற் குவித்து, வைச்சிடுமை யொடும், விரைந்து நோக்கிக் கரைந்த மனத்தொடும், திருவைந்

தெழுத்தைப் பெருநெஞ்சழுத்தி, உள்ளே புகுந்து உவகைக் கடலுள் அழுந்தினுள் உலகுடைநாயகி. சங்கற்பம் செய்து கொண்டாள். 'சீரார் அருளால் சிந்தனையைத் திருத்தி ஆண்ட சிவலோகா பேராநந்தம் பேராமை வைக்கவேண்டும் பெருமானே' என்று வேண்டி, நாத! நீ மொழிந்த ஆகமத்தின் இயல்பினுல் இங்குஉனை அர்ச்சனை புரிய என்ஆசை பொங்குகின்றது (திருக்குறிப்புத் தொண்ட நாயனுர் புராணம். 52.) என்று இறைஞ்சினுள் போகம் ஆர்த்தபூண் முலையினுள்.

மாவடி நிழலில் சேவடிவழிபடு எனப் பாவடிக் கிரங்கிப் பல நலம் அருளும் கோவடித் துரைத்தான்.

"பூமுதல் பூதசுத்தி புரிந்தகப் பூசைஆற்றிக்
காமரு மலரும் வாசவருக்கமும் கலந்த தெண்ணீர்த்
தோமில் பாத்தியமே ஆச மனம்அருக்கியம் தூய்தாக்கி
மாமுதல் இதழித் தாரார் முடிமிசை மலரைமாற்றி"

சத்தியாதி சத்தி பரியந்தம் வாய்ந்த தத்துவாசனத்தின் மேல் சதாசிவ மூர்த்திமானும் எங்கும் பிரகாசமான ஆநந்த நிமல வாழ்வும் ஆகிய திருவேகம்பச் சுடரினைத் தெளியக் கண்டு "பாத்தியம் முதலா மூன்றும் பதம் முகம் முடியின் ஈத்தாள்." ஆகம விதியெலாம் எய்த மெய்வழி பாட்டைச் செய்தாள்,

"கரம் தரும் பயன் இது என உணர்ந்து
கம்பம் மேவிய உம்பர் நாயகர்பால்
நிரந்த காதல் செய் உள்ளத்தள் ஆகி
நீடு நன்மைகள் யாவையும் பெருக
வரம்தரும் பொருளாம் மலைவல்லி
மாறிலா வகை மலர்ந்த பேரன்பால்
சிரம்பணிந் தெழு பூசைநாள் தோறும்
திருவுளம் கொளப் பெருகியது"

நாதரும் பெருவிருப்புடன் செய்யும் நங்கையின் வழிபாட்டைத் தங்கையின் இயற்றும் அளவினும் பெருமையதாகக் கொண்டருளினுர். காதல் மிக்க ஒரு திருவிளையாட்டைச் செய்யக் கருத்துட் கொண்டருளினுர். ஏழு கடலும் ஓங்கி, வான் அளாவ பரந்து மேற்செல்வது போல், கம்பையாற்று வெள்ளத்தைக்

காட்டி அம்பையாற்றுப் பூசையை அழிப்பதுபோல் அச்சுறுத்தினர், அந்நாதனுர். அம்பைக்குக் கம்பை வெள்ளம் காட்டி வெருட்டிட அஞ்சி வெருவி ஓடித் தழுவினுள் அம்பிகை. வெள்ளமாக வந்தது மெய்யன்று, கள்ளமே. அக்கள்ளமான நிலையில் கள்ளக் கம்பனுனுன். அம்பிகை தழுவினுள். அதன் காரணம் அச்சம். அச்சம் தீர்த்து வழிபட்ட பயனே அருளிய நல்ல வரத்தால் நல்ல கம்பன் ஆனுன். வெள்ளமாக வந்த கள்ளம் புலப்படும் நிலையில் வெளிப்பட்டருளினுன் இறைவன். 'வெளிப்பட்ட கள்ளக் கம்பன்' என்றதால், கள்ளமும் அக்கள்ளம் தீரவெளிப்பட்ட நலமும், வெள்ளம் காரணமாக வெள்ளக்கம்பமும் ஏற்பட்ட உண்மையை ஊகித்து அறியலாம். பெயர்க் காரணம் பின்னர் விளக்கியெழுதப்படும். "மலைக் குலக்கொடி பரிவுறுபயத்தால் மாவின் மேவிய தேவநாயகரை, முகைக்கு வட்டொடு வளைக்கையால் நெருக்கி முறுகுகாதலால் இறுகிடத் தழுவச், சிலைத் தனித் திருநுதல் திருமுகைக்கும் செந்தளிர்க்கரங்களுக்கும் மெத்தெனவே, கொலைக் களிற்றுரி புனைந்த தம் மேனி குழைந்து காட்டினுர் விழைந்த கொள்கையினுர்" (பெரிய புராணம், ஷி, 64)

காதலி தழுவக் கம்பர் மெய்குழையக் கண்டு எல்லாயோனிகளும் உயிர் உருக உடல் உருகப் பெற்று, ஒன்ருயின. ஆதி தேவனுர் அம்மையின் செங்கைவளைத் தழும்பும் கொங்கைக் கிளைத் தழும்பும் அணி செய்யப் பெற்ருர். இவ்வணி மெய்ப் பயன் (இரு பொருளது.)

குறை வழிபாட்டை நிறைவழி பாடாகச் செய்ய முடியாமையை நம் அம்மைக்கு நம் அப்பன் செப்பினுன். இப் பூசை என்றும் மன்னுவது; மாறிலாதது. எம்பெருமான் பக்கல் இறைவி செய்யும் வழிபாடு என்றும் முடிவதில்லை என்று அவனே சொல்லிவிட்டான்.

இறைவன்பால் இறைவி பெற்ற வரம் இது :—

"என்னரும் பெருவரங்கள் முன்பெற்றங்
கெம்பிராட்டிதம் பிரான் மகிழ்ந்தருள
மன்னிின்மேல் வழிபாடு செய்தருளி
மனையறம் பெருக்குங் கருணையினுல்

நண்ணும் மன்னுயிர் யாவையும் பல்க
நாடு காதலின் நிடிய வாழ்க்கைப்
புண்ணியத் திருக் காமக் கோட்டத்துப்
பொலிய முப்பதோ டிரண்டறம் புரக்கும்."

அத்தகைய அம்மையின் திருவடிச் செம்மையை வழிபட்டார் பெறும் வரம் யாது? அதுவே ஏழுலகையும் உடைமையாகப் பெற்றுப் பொதுவறப் புரக்கும் ஒப்புயர்வில்லா தோங்கும் அரசாட்சி. இறைவி இறைவனைத் தழுவிய தன்பயன் அவனுக்கு இரண்டு தழும்பே அன்றி வேறில்லை. அவ்விறைவி அம்முழு முதலைத் தழுவிய பயன் உலகேழும் தோன்றியது மட்டும் அன்று, அவளை வழிப்பட்டார்க்கு அவ்வேழுலகையும் அளிக்கும் ஒப்புயர்வில்லாத உலகக் கொடையும் பயனுயிற்று.

"அங்கம் பகுந்தளித்த அம்பலத்தார்க் காம்பலங்கைச்
சங்கொன்று கொங்கைத் தழும்பொன்றே—நங்கையுனை
வந்திப்பார் பெற்றவரம் மற்றெருநீ வாய்த்ததிரு
வுந்திப்பார் ஏழும் ஒருங்கு"

———

(தொடரும்)

---

இராகம்: ஹம்சநாதம் தாளம்: ஆதி

பல்லவி

கந்தனே உன்கழல் அடிபணிந்தேன்
சிந்தனை கவரும் செல்வனே துதித்தேன் (கந்தனே)

அனுபல்லவி

செந்தூரில் திகழும் ஜெய ஷண்முகனே
விந்தை புரிந்திடும் விமலனே குகனே் (கந்தனே)

சரணம்

நொந்த சமயம் நான்நினைந்திடும் போதினில்
வந்தருள் புரியும் வடிவேலவனே
சந்ததம் சுகமும் எய்திட எனக்கு
உந்தனருள்பெற உதவிடும் சீலனே (கந்தனே)

வி. கே. முத்தையா பிள்ளை, பி. ஏ., பி. எல்.,
வண்ணுர்பேட்டை, திருநெல்வேலி-3.

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஐந்தாம் தந்திரம் Tantra the Fifth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,
Member, Legislative Assembly,
MADRAS-31.

மலர் 15. இதழ் 6-ன் தொடர்ச்சி

### Gnana, Yoga, Kriya and Sariya difined
### ஞானம், யோகம், கிரியை, சரியை-இவைஇன்னவெனல்

26 உயிர்க்குயிராய் நிற்றல் ஒண்ஞான பூசை;
உயிர்க்குஒளி நோக்கல் மகாயோக பூசை;
உயிர்ப்பெறு மாவாகனம் புறப்பூசை;
செயிற்கடை நேசம் சிவபூசை யாமே.

To be one, Life within life — that the luminous path of Gnana;
To seek the light for life— that the mighty path of Yoga;
To invest idols with life — that the demonstrative way of Kriya;
To adore Siva in love — that the basic worship Sariya.

சிறப்பு மிக்க ஞான பாதையாவது, ஆன்மாவையும் பரமான்மாவாகிய இறைவனையும் ஒன்றியவாறு கண்டு நிற்றல்: ஆற்றல் மிக்க யோக நெறியாவது, ஆன்மாவுக்குள்ளே இறை யொளியைக் காண்பது; கல்லிலும் செம்பிலும், உள்ளத்தே நிற்கும் இறைவன் சக்தியை ஏற்றி வழிபடுதல் கிரியை என்னும் புறப்பூசை; உள்ளத்து அன்பால் இறைவனை வழுத்துதல் சிவ பூசையென்னும் அடிப்படையான சரியை நெறியாகும்.

குறிப்பு: வரி 3 ஆவாகனம் – சத்தியை ஏற்றுதல்.

வரி 4. கடை - அடிப்படை.

நான்கு பூசைகளும் உள்ளத்தால் இறைவனோடு நால்வகையில் தொடர்பை ஏற்படுத்தும் பூசைகளாகவே, உள்ளந்தொடும் சரியை நான்குக்கும் அடிப்படையாயிற்று.

விரும்பும் சரியை முதல்மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்பு, மலர், காய், கனிபோல் அன்றோ பராபரமே.

என்னும் தாயுமானவர் வாக்கு இதனையே உட்கொண்டது.

## The ingredients of Sariya worship
### சரியை நெறியின் செயல்கள்

27 நாடு நகரமும், நற்றிருக் கோயிலும்
தேடித் திரிந்து, 'சிவபெருமான்' என்று
பாடுமின், பாடிப் பணிமின், பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வனே.

Wander thou through town and Villa
Seek Him thou through shrine and temple
Sing of Him as "Siva, Siva, my Lord"
And thus may thou offer worship meek,
And the Lord will make thine heart His temple.

நாடுதோறும், நகரம்தோறும், நல்ல திருக்கோயில் தோறும் தலயாத்திரை செய்து, இறைவனை நாடுங்கள்; "சிவ பெருமானே" என்று சொல்லி உள்ளமுருகப் பாடுங்கள்; பணியுங்கள்; நெஞ்சம் குவிதல் செய்யுங்கள்; அவன் குவிந்த அந்த நெஞ்சத்தையே கோயிலாகக் கொள்வான்.

## The ways of those who follow the four modes of worship - Sariya, Kriya, Yoga and Gnana
### சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களினும் நின்றோர் இயல்பு

பத்தர் சரியை படுவோர்; கிரியையோர்
அத்தகு தொண்டர் அருள்வேடத் தாகுவோர்;

சுத்த இயமாதி சாதகர் தூயோகர்;
சித்தர் சிவஞானம் சென்றுஎய்து வோர்களே

They who follow the path of Sariya are Bhaktas;
In Kriya these devoted souls don the holy monkish robe,
They who practise Iyma and the rest are the Yogis;
And they who reach the sivaGnana are the Siddhas true

சரியை பாதத்தில் நிற்போர் பத்தராவார்; அங்ஙனமாயி ஞேர் கிரியை ஒழுக்கத்தை மேற்கொள்கையில், சிவ வேடம் பூண்கிருர்கள்; இயமம், நியமம், ஆதனம், பிராணுயாமம், பிரத் தியாகாரம், தாரணை, தியானம், சமாதி ஆகிய எட்டு முறைகளை யும் பயின்று சாதனை பெற்ருேர்கள் மெய்யான யோகிகளாவார் கள்; சிவஞானம் கைவரப் பெற்ருேர் சித்தர்களாவார்.

குறிப்பு: வரி 4. இங்கு சித்தர் என்றது ஞான சித்தரை.

(தொடரும்.)

# காஞ்சிக் கடிகை

திரு. K. M. வேங்கடராமையா அவர்கள் M. A.,
திருப்பனந்தாள்.

## காஞ்சிபுரத்தின் பழமையும் பெருமையும்.

புண்ணியத் தலங்கள் ஏழனுள் ஒன்ருகக் கருதப்படுவது காஞ்சி. காசி என்ற சொல்லே காஞ்சி என்ற சொல்லில் அமைந்திருப்பதைக் கொண்டு காஞ்சியின் பெருமையை அறியலாம். அசோகன் காஞ்சியில் ஸ்தூபிகளைக் கட்டினன். புத்தரே காஞ்சிபுரத்துக்கு வந்து தம் சமயத்தைப் போதித்ததாகக் கூறப்படுகிறது. கி. மு. 150-இல் இருந்த பதஞ்சலி முனிவர் தமது மாபாஷ்யத்தில் காஞ்சிபுரத்தைக் குறிப்பிடுகிருர். கி. மு. முதல் நூற்ருண்டில் இறுதியில் கரிகாலன் வடநாடு நோக்கிப் படையெடுத்துச் சென்ற பொழுது, வேடன் ஒருவனுல் காஞ்சியின் வளப்பத்தை அறிந்து, மதில்களை எழுப்பி, வேளாளர்களைக் குடியிருத்தினன். "தீயஎன்பன கனவிலும் நினைவிலாச் சிந்தைத் தூய மாந்தர்வாழ்" தொண்டை நாட்டின்கண் யாவரும் ஏத்தும் நிலையில் விளங்குவது காஞ்சி மாநகரம். சங்க காலத்தில் காஞ்சிபுரம் சிறந்த நகராகத் திகழ்ந்தது. பெரும் பாணுற்றுப் படையில் காஞ்சிபுரம் சிறப்பிக்கப் பெறுகிறது; அப்பொழுது தொண்டைமான் இளந்திரையன் ஆண்டதாகத் தெரிகிறது. மணிமேகலை காலத்தில் காஞ்சிபுரத்தை ஆண்டவன் இளங்கிள்ளி என்பவன். இவன் புத்தர் கோயில் ஒன்று கட்டினன். வஞ்சிமா நகர்க்கண் இருந்த மாசாத்துவான் கூறிய வண்ணம் மணிமேகலை காஞ்சிமா நகர்க்குச் சென்ருள்; அங்குப் பௌத்த பீடிகை அமைத்தாள். அமுத சுரபியைக் கொண்டு எல்லாவுயிர்களின் பசிப்பிணியையும் போக்கினுள். அங்கு அறவண அடிகளிடம் தவத்திறம் பூண்டு தருமம் கேட்டாள். (இவை மணிமேகலையிற் கண்டவை).

## பல்லவர் கோநகர்

இத்தகைய காஞ்சிபுரம் சிம்மவிஷ்ணு பல்லவன் காலமுதல் (அதாவது கி. பி. 575 முதல்) பல்லவர்களுடைய கோநகரமாக அமைந்திருந்தது. இதற்கு முன்னமேயே இக்காஞ்சி மாநகர் சிலசமயம் பல்லவர் கையிலும் இருந்தது; கைம்மாறியதும் உண்டு.

## காஞ்சிக் கடிகை

இங்ஙனம் கைம்மாறினாலும் இக்காஞ்சிமா நகரம் கல்வியிற் சிறந்த மாநகரமாகவே பண்டுதொட்டுத் திகழ்ந்து வந்தது. காஞ்சிபுரத்தில் இருந்த கல்வி நிலையம் (Ghatika) கடிகை எனப்பட்டது. கடிகை என்ற சொல் க$^4$டிகா என்ற வட சொல்லின் தற்பவமாகும்; 'க$^4$ட்' என்ற தாது வினின்று தோன்றியது. இத்தாது ஆழ்ந்து வேலைசெய், சுறுசுறுப்பாய் இரு, என்றின்னோரன்ன பொருள்படும். எனவே க$^4$டிகா என்பது ஆழ்ந்து அறிவு பெற முயலும் இடம் என்று பொருள்படக் கூடும். கில் ஹார்ன் என்பார் க$^4$டிகா என்பதைக் கோஷ்டி என்ற சொல்லுடன் தொடர்பு படுத்திக் கடிகா என்பது பிராஹ்மணர்களின் கூட்டத்தைக் குறிக்கும் என்பர்.

## காஞ்சிக்கடிகையின் பழமை

ஏறத்தாழ 345 முதல் 370 வரை மயூரசர்மன் என்ற ஒரு கதம்பகுல அரசன் ஆண்டு வந்தான். இவன் ஒரு வீர மறையவன்; திருப்பருப்பதத்தைச் சேர்ந்த நாடுகளைக் கைப்பற்றி ஆண்டவன். இவனுடைய பிரபவுத்திரன் (கொட்பேரன் ) காகுத்தவர்மன் எனப் பெறுவான். இவன் பல்லவரை அறவே வெறுத்தவன். இவனுடைய கல்வெட்டு தாளகுண்டாவில் கிடைத்துள்ளது. தாளகுண்டா மைசூர்ப் பகுதியில் சிமோகா ஜில்லாவில் சிகார்பூர் தாலுகாவில் உள்ளவூராகும். இவ்வூர்க் கல்வெட்டில் காஞ்சிக் கடிகையில் மயூர சன்மன் படித்தான் என்று சொல்லி இருக்கிறது. ஏறத்தாழ கி. பி. 360-இல் இது நிகழ்ந்திருக்கலாம், எனவே 4-ஆம் நூற்றுண்டிலேயே வேற்றூர்களினின்று காஞ்சிபுரத்திற்குப் பிறர் வந்து கல்வி கற்கக் கூடிய அளவு பெருமை பொருந்தியிருந்தது இக்காஞ்சிக் கடிகை என்று கொள்ளலாம்.

## எத்தகைய கல்வி

மயூரசன்மன் தார்க்குகனுகக் காஞ்சிக்குச் சென்ருன் என்று சொல்லப் படுகிறது. (க[4]டிகாம் விவேசதார்க்குகார்) தார்க்குகா என்பது யாசகனைக் குறிக்கும். இதனுல் அறிவை யாசித்தற்கு மயூரசன்மன் சென்ருன் என்று தெரிய வருகிறது. மயூரசன் மன், தான்மட்டும் கற்கச் செல்லவில்லை. தன் ஆசிரியன் வீரசன்மனுடன் சென்ருன். பிரவசனம் முழுவதையும் கற்க விழைந்து அங்கு இருவரும் சென்றனர். (அதி[4]ஜிகா[3] ம்ஸூஹ ப்ரவசநம் நிகி[2]லம்) இதனுல் வேதங்களைப் பிரவசனம் செய்யச் சென்றமை அறிய வருகிறது. பிரவசனம் செய்தலாவது கூர்ந்து ஆய்ந்து கற்பதாகும். எனவே வேதங்களில் வல்ல ஆசிரியனும் மாணவனும் ஆகிய இருவரும் வேத ஆராய்ச்சிக் கல்வி கற்றற் பொருட்டுச் சென்றனர் போலும்.

நந்தி வர்மனது காசாகுடி செப்பேடுகளும் நான்கு வேதங் களும் கடிகையில் கற்பித்தனர் என்று கூறுகின்றன. (சாதுர் வேத்ய மவீவ்ருத[4]த் ஸ்வக[4]டிகாம் பு[4]தே[3]வதாப[4]க் தி தா) எனவே காஞ்சிக் கடிகாவில் வேத ஆராய்ச்சிக் கல்வியே கற்பிக் கப்பட்டதென்பது தெளிவு.

## கடிகையும் பல்லவ அரசரும்

காஞ்சி க[4]டிகா பல்லவ அரசரது மேற்பார்வையில் இருந் தது; அவர்களுடைய ஆதரவிலேயே சிறப்புடன் திகழ்ந்தது. பல்லவ அரசர் யாவரும் அதனைக் கண்ணும் கருத்துமாகப் பாது காத்து வந்தனர். பல்லவர் ஆதரவில் திகழ்ந்த இக்கடிகையில் கதம்ப அரசைத் தோற்றுவித்த மயூர சன்மன் தொடர்ந்து படிக்க முடியாதவன் ஆனுன். ஒருசமயம் பல்லவனுடைய குதிரைச் சேவகனுக்கும் மயூர சன்மனுக்கும் கடுமையான சண்டை மூண்டது. "அந்தோ, இந்தக் கலியுகத்தில் பிராமணர் கள் க்ஷத்திரியரைக் காட்டிலும் வன்மை குறைந்தவராகவே இருக்கிருர்களே! என்னதான் தன் குருவைத் தொழுது சீராக வேதத்தைப் படித்தாலும் பரமசித்திபெற அரசனது உதவியைத் தானே நாடவேண்டியிருக்கிறது; இதனினும் துன்பம் தரத் தக்கது யாது?" என்று குதிரைச் சேவகன் ஏளனமாகப் பேசின னும், இதைக் கேட்டதும் மயூர சன்மன் கொதித்து எழுந்து

குசம், சமிதை, கற்கள், அருக்கு, நெய் முதலிய வற்றை ஏற்கும் கையில் ஒளி பொருந்திய வாளை ஏந்தினுன்; பல்லவனுடைய காவலாளர்களை வென்று ஸ்ரீபர்வதம் வரைபரவியுள்ள அடவியிற் புகுந்து சென்றுன்.

பல்லவரின் இடையீடில்லா ஆதரவு

பல்லவர்க்கும் மயூர சர்மனுக்கும் விரோதம் இருந்தமையால் தான் மேற்கூறிய சம்பவம் நிகழ்ந்தது; மயூர சன்மன் பிரமசித்தி அடையாது ஓடநேரிட்டது.

ஏறத்தாழ கி. பி. 400-க்குச் சிறிது முற்பட்ட காலத்தில் கந்த சிஷ்யன் இரு பிறப்பாளர் தம் கடிகாவைச் சத்ய சேனன் என்ற அரசனிடமிருந்து கைப்பற்றினுன் என்று வேலூர்ப் பாளையப் பட்டயம் கூறுகின்றது. ஸ்கந்த சிஷ்ய ஸ்ததொப[4] வத்த விஜாநாம் க[4]டிகாம் ராஜ்ஞாஹ் ஸத் யஸேநாஜ்ஜ ஹாரய: (S. I. I. Vol.II Part VP. 508 e 12-13) என்பது பட்டயத்துக் கண்டது. எனவே மூன்ரும் நூற்ருண்டின் இறுதியில் காஞ்சி க[4]டிகா பகைவர் கைவசப் பட்டுக் கலங்கியது; கந்த சிஷ்யன் தான் மீண்டும் கைப்பற்றி நன்னிலையில் அமைத்தான். பின்னர் இக்கடிகை 7-ஆம் நூற்ருண்டின் இறுதி வரையிலும் சிறந்து விளங்கியது. சிம்ம விஷ்ணு காலத்தில் பாரவி என்பார் காஞ்சி புரத்திற்கு வரவழைக்கப்பட்டார் என்று அவந்தி சுந்தரி கதை கூறுகிறது. ராஜ சிம்ஹன் (நரசிம்மன் II) அரசாண்ட காலத்தில் (685–705) பல்லவப் பெருநாட்டில் பஞ்சம் ஒன்று ஏற்பட்டது. பாரவியின் பேரனுகிய தண்டி பஞ்சக் கொடுமையைப் பின்வருமாறு கூறுகிருர்:- "சோழ பாண்டிய நாடுகள் பஞ்சக் கொடுமையால் மிக்க துயருற்றன; பெண்கள் புறக்கணிக்கப்பட்டனர்; அக்னி ஹோத்திரங்கள் நிறுத்தப் பட்டன; நெற் களஞ்சியங்கள் நெல்லில்லாது ஒழிந்தன; வீடு களினின்றும் மக்கள் விரட்டப்பட்டனர்; பெருமை அழிந்தது; மரங்கள் வெட்டுண்டன; செல்வர் கொலை செய்யப்பட்டனர்; கௌசிகியின் மகனுகிய தண்டியின் உற்ருர் உறவினருட் சிலர் மாண்டனர்; சிலர் நீங்கினர்; தண்டியும் வாழ வழியின்றிக், கையிற் பணமுமின்றி நாடெங்கும் சுற்றி அலையலானுர்; பஞ்சம் நீங்கிய பிறகு காஞ்சிக்கு வந்தார்; அவந்தி சுந்தரி கதை

என்ற நூலை இயற்றினார். பஞ்சத்தாற் சீரழிந்த கல்வி நிலையத்தை இராசசிம்மன் மீண்டும் நன்னிலையடையச் செய்தான்.' இதனையே வேலூர்ப்பாளையப் பட்டயம் 'நரஸிம்ஹ வர்மா புனர்வ்யாதா[4]த்[3]யோ க[4]டிகாம் த்[4]ஜாநாம்' என்று கூறுகிறது. இங்ஙனம் சீர்ப்படுத்தப்பட்டதும் கடிகை மீண்டும் நன்கு நடைபெறலாயிற்று ஏறத்தாழ 705-ல் இராஜசிம்மன் இறந்தான். அவன் மகன் இரண்டாம் பரமேசுவரன் 710 வரை ஆண்டு இறந்தான். பல்லவப் பேரரசை ஏற்று நடத்தத் தக்க அரசன் இல்லை. அப்பொழுது கடிகையாரும் பிறரும் இரண்ய வர்ம மகாராசன் என்பவனைக் கண்டு தமக்கு ஓர் அரசனை வேண்டிப் பெற்றனர். அந்நாளில் இக்கடிகையாருள் ஒருவர் தரணி கொண்ட போசர் எனப் பெற்றார். அவர் வித்தாகமிகர் ஆகமங்களிற் சிறத்த அறிவு படைத்தவர்.

இரண்ய வர்ம மகாராசன் தன் மகன் 12 வயது பாலகனாயிற்றே, அவனை எப்படி அரசனாக்குவது என்று மயங்கத் தரணி கொண்ட போசர் இரண்ய வர்ம மகாராசனைக் கண்டு 'இவர் அரசாள்வதற்குத் தவம் செய்திருக்கிறார்; அஞ்சற்க' என்று கூறி உடன்படுமாறு செய்தார். பின்னர் யானைத் தலைபோன்ற மகுடங்கள் கொண்டு வந்து அளித்த பொழுது இரண்ய வர்மன் திகைக்கத் தரணிகொண்ட போசர் 'இது களிற்றின் தலையன்று இவை நின் மகற்குரிய மகுடங்கள்; ஏற்றுக் கொள்க' என்று கூறி ஏற்குமாறு செய்து காஞ்சிக்கு அழைத்துச் சென்று நந்தி வர்மன் என்று பெயர் சூட்டி அரசனாக்கினான். இங்ஙனம் கடிகையாரும் அவர்களுள் ஒருவனாகிய தரணி கொண்ட போசரும் ஏறத்தாழக் கி. பி. 710-இல் அரசனைத் தேர்ந்தெடுப்பதில் பெரும்பங்கு கொண்டனர்.

இனி மேற்குறித்த பல்லவ மல்லனாகிய நந்திவர்மனது ஆட்சிக் காலத்தில் சளுக்கிய அரசனாகிய இரண்டாம் விக்கிரமாதித்தன் காஞ்சியின் மேல் படையெடுத்து வந்தான்; பல்லவரை முறியடித்துக் காஞ்சியில் நுழைந்தான்; கயிலாயநாதர் கோயிலின் செல்வத்தைக் கண்டு வியந்தான்; ராஜசிம்ஹேஸ்வரக்ருகம் எனப் பெயர் பெற்ற அக்கோயிலின் செல்வத்தை அக்கோயிலுக்கே அளித்தான். இதனை அக்கோயில்

முன்மண்டபத் தூண்களிற்கண்ட கல்வெட்டிற் குறித்துள்ளான். அன்றியும், இதனை அழிப்பவர்களும் இவ்வரசனால் அளிக்கப் பெற்ற தருமத்தை நிலைகுலையச் செய்பவரும் கடிகையிலுள்ள மகாஜனமான்களைக் கொன்றவர் புகும் உலகில் புகுக என்றும் எழுதியிருக்கிறான். இதனால் பல்லவரின் பகைவனாகிய விக்கிரமாதித்தனுக்கும் கடிகையாரிடத்திருந்த பெருமதிப்பு விளங்குகிறது. இதில் கடிகையாரை மகா ஜனமான் என்று கூறியிருப்பது அறியத்தகும்.

காஞ்சிக் கடிகை மறையவர்க்கு மட்டுமா?

மயூரசர்மன் என்னும் வீர மறையவனும் அவன் ஆசிரியனாகிய வீரசர்மனும் கற்பதற்குக் காஞ்சிக் கடிகைக்கு வந்தனர். காசாகுடி பட்டயத்தில் "ஸ்வக⁴டிகாம் பூ⁴தே³வதாம்" (அதாவது பிராமணர்களுடையது கடிகை) என்று கூறப் பெற்றுள்ளது. வேலூர்ப்பாளையப் பட்டயமும் "த்⁴விஜாநாம் கடிகாநாம்" (அதாவது இருபிறப்பாளர் கடிகை) என்று கூறுகிறது. எனவே காஞ்சிக்கடிகையில் இருந்தவர் பிராஹ்மணர்களே என்பது உறுதி. கடிகையைக் கடிகஸ்தானம் என்றும் கூறுவதுண்டு.

(தொடரும்)

---

# திருப்பூவணம்



தேவாரமணி, திரு. சட்டையப்பன் அவ[illegible]
திருப்பனந்தாள்.



**பா**ண்டிய நாட்டுத்தலங்கள் பதினான்கில் பதினொன்ருவது தலமாக விளங்குவது திருப்பூவணம். இத்தலம் மதுரைக்குக் கிழக்கே பன்னிரண்டாவது கல்லில் இருக்கிறது. இறைவன் 'பூவணநாதர்' என்ற திருநாமத்தோடும், அம்மை 'மின்னம்மை' என்ற நாமத்தோடும் அருள் வழங்குகின்ருர்கள். தல விருட்சம், பலா. தீர்த்தமானது வைகையாகும்.

முடியுடை வேந்தர் மூவராம் 'பாண்டியர், சேரர், சோழர்' ஆகியோர் வணங்கி வழிபடும் தலம் திருப்பூவணம்.

இதைத் திருஞான சம்பந்தப் பெருமான் அருளிய தக்கேசிப் பண் விளக்குகின்றது.

"அறையார் புனலுமா மலரும் ஆடரவார் சடைமேல்
குறையார்மதியஞ் சூடிமாதோர் கூறுடையானிடமாம்
முறையால் முடிசேர் தென்னர்சேரர் சோழர்கள் தாம்வணங்கும்
திறையாரொளிசேர் செம்மையோங்கும் தென்திருப் பூவணமே."

பூவணத்து இறைவனைப் 'புனிதனர்' என்கிருர் அப்பர் பெருமான்,

'வடிவேறுதிரி சூலந்தோன்றும்' எனத் துவங்கிப்பாடும் திருத்தாண்டகத்துப் பாடல் இறுதி தோறும் 'புனிதனர்க்கே' என்றருள்கின்ருர்.

அகத்தியர் தேவாரத்திரட்டில் அது 'சிவனுநுவம்' என்னும் தலைப்பில் அமைந்துள்ளது. பாராயணத்துக்குகந்ததும் சிவனது

செயல்-உருவம் ஆகியன வற்றை நமது மனக்கண்முன் சிறந்த தோர் காட்சியாக அமைக்க வல்லதுமாகும் அப்பதிகம்.

"எண்ணி யிருந்து கிடந்து நடந்தும்
அண்ணலெனு நினைவார் வினை தீர்ப்பார்
பண்ணிசையார் மொழியார் பலர் பாடப்
புண்ணிய னுறை பூவண மீதோ."

என்று சுந்தரரின் இந்தளப் பண்ணில் 'புண்ணியனுர்' ஆகின்றார் பூவணநாதர். பூவணங் கோயில் கொண்ட பிரானைப் 'புனிதன்' 'வனிதைபாகன்' 'குழகன்' 'தீவணன்' என்றெல்லாம் கருவூர்த் தேவர் திருவிசைப்பா பாடுகின்றார். 'பூவணங்கோயில் கொண்டாயே' என்று பாடல் இறுதி தோறும் கூறிச் செல்கின்றார் அவர்.

இத்தகைய பெருஞ் சிறப்பு வாய்ந்த திருப்பூவணத்தில் வாழ்கின்றாள் 'பொன்னனையாள்' என்னும் பெண்ணொருத்தி. திருக்கோயில் பணிபுரியும் உருத்திரகணிகையருள் பொன்னனையாளும் ஒருத்தி. சிவத்தொண்டே சிறந்ததெனக் கொண்டு சிவனடித் தொண்டு செய்து சிவபக்தியில் சிறந்து விளங்கினாள் அவள்.

சிவபெருமானது திருவுருவை வார்ப்பிக்க வேண்டுமென்னும் பெருவிருப்பம் அவள் நெஞ்சத்தில் குடிகொண்டது. நாள்தோறும் கிடைக்கும் வருவாய் மகேசுவர பூசைக்கே போதுமான அளவில் இருந்தது. அதனால் சிலை வார்ப்பிக்கப் பொருள் கிடைக்காமல் மிகவும் வருந்தினாள்.

'வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்' என்பது திருமுறையின் முடிபு!

சித்தர் வேடந்தாங்கி இறைவன் பொன்னனையாளின் இல்லத்துக்கு எழுந்தருள்கின்றான்.

அகமும், முகமும் மலர அன்பொடு வரவேற்றாள் பொன்னனையாள். சித்தராய சிவபெருமானிடம் அவள் பெருமானின் உருவம் வார்க்கப் பொருளில்லாத குறையைச் சொல்லி முறையிட்டாள். அவள் உள்ளக் கிடக்கையை அறிந்த சிவபெருமான்,

"பெண்ணே! உன் வீட்டில் உள்ள ஈயம், பித்தளையாலான பாத்திரங்கள் எல்லாவற்றையும் கொண்டுவா!" என்றுகூறினர். பொன்னனையாளும் பெருமான் சொன்னபடி தன் வீட்டிலுள்ள வெள்ளி, ஈயம், பித்தளை, வெண்கலம் ஆகிய எல்லாப் பாத்திரங்களையும் கொண்டு வந்து அவர்முன் வைத்தாள்.

சித்தர் அவற்றின்மேல் வெண்ணீற்றைத் தடவினர்; பின்னர் பொன்னனையாளிடம்,

"பெண்ணே! நீ இதை யெல்லாம் இன்றிரவு நெருப்பிலே போட்டுப் புடம்வை; அவை பொன்னுக மாறிவிடும். பிறகு உனது விருப்பப்படி சிவபெருமானது திருவுருவை வார்க்கலாம்." என்று கூறினர். கூறியவர் மறைந்து விட்டார்.

சித்தராக வந்தவர் சிவபெருமான் என உணர்ந்த பொன்னனையாள் உள்ளம் பூரித்து விட்டாள்; திருவருளை எண்ணி மனம் குளிர்ந்தாள். இறைவனது அருளாணை வண்ணம் அந்தப் பாத்திரங்களை யெல்லாம் நெருப்பிட்டுப் புடம் வைத்தாள். பொன்னுகிய பின் சிவபெருமானின் திருவுருவை வார்ப்பித்தாள்.

சிவபெருமானின் திருவுருவை வார்த்த பின் 'அழகிய பிரானே?' என்று அதை முத்தமிட்டாள்; பிரதிட்டை செய்தாள்; திருவிழாக்கள் முதலியன செய்தாள். செம்பு, பித்தளை, ஈயம் போன்ற உலோகங்களை ரசவாத முறையால் செம்பொன்னுக்கிய சிவபெருமானது திருவிளையாடல் 'இரசவாதம் செய்தபடலம்' என்ற பகுதியில் பரஞ்சோதி முனிவர் அழகாகப் பாடுகின்ருர். திருவிளையாடற் புராணத்திலே இரண்டாவது காண்டமான கூடற் காண்டத்திலே அமைந்திருப்பது காண்க.

" திருவால வாய்அமர்ந்த செஞ்சுடரைச் செழும்பொருள்நூல்
தருவானை நேரிசையும் தாண்டகமும் முதலான
பெருவாய்மைத் தமிழ்பாடிப் பேணுதிருப் பணிசெய்து
மருவார்தம் புரம்எரித்தார் பூவணத்தை வந்தடைந்தார்.

—பெரிய, புராணம்.

---

# ஓர் பைங்கூழ் சிறுகாலேச்செய்!



திரு. அ. சுவாமிநாதன் அவர்கள்,
பாண்டிச்சேரி.

"வினை விதைத்தவன் வினை அறுப்பான்;
தினை விதைத்தவன் தினை அறுப்பான்."

இஃது ஒருபோதும் பொய்யா மெய்ம் மொழியாகும். ஒருவன் கரும்பைப் பயிர் செய்துவிட்டு வேம்பைப் பெறமாட்டான்; அவரையை விதைத்தவன், துவரையைப் பெற வழியில்லை. இங்ஙனமிருக்க நாமும், நமது வாழ்க்கையில் நல்லதோர் பயிரை விளைவித்தால், அதனால் பெரும் பயன் அடையலாம். அப்பயிர், ஒப்பற்றதாயிருத்தல் வேண்டும். நம்முடைய இளமைக் காலத்தி லேயே பயிரிடத் தொடங்கினல்தான், இறுதிநாள் இதுவென அறியமுடியாத இந்நிலையாமை வாழ்க்கையில் உயிர்க்கு உறுதி காணமுடியும். நிற்க:

பயிர்த்தொழில் என்ருல் நிலம் வேண்டும்; விதை வேண்டும்; எரு வேண்டும்; நீர் வேண்டும். இவை எல்லாம் இல்லாமல் திக்கற்ற ஏழை மனிதன் என்ன செய்ய முடியும் என்கிற வினு எழும். இதற்கு விடை பகர்வது கடினந்தான். ஆயினும் நாமும், நம் வாழ்க்கையில் எப்படியேனும் "ஓர் பைங்கூழ்" நம் இளமைக் காலத்திலேயே விளையச்செய்துவிட வேண்டும் என்று ஆசிரியர் முனைப்பாடியார் விழைகிருர். அவர் கூறும் பயிர் அறக்கதிர் ஈனும் ஓர் பைங்கூழ்!

இப்பயிரை விளைவிக்க, ஒருவன் தக்கதொரு வினையாளனைத் தேட வேண்டும். அவன் யாண்டுளான்? யாண்டும் இல்லை; நம் முள்ளிருக்கும் நம் நெஞ்சந்தான். அவனைப் பார்த்து ஆணை யிட்டோமானல், உடனே இப்பசிய பயிரை விளைவிக்கத் தொடங்கிவிடுவான். அவனுக்கு நிலம், விதை, எரு, நீர் இவை பற்றிய குறைபாடுகள் ஒன்றும் வரக்கூடாது. இதற்கு வழி என்ன? முனைப் பாடியார் வாயிலாகவே வழி அறிவோம்!

நிலம்

நெஞ்சமே! நீ பயிர்த்தொழிலில் ஈடுபடும் வண்ணம் ஆணையிடுகிறேன். அறக்கதிர் ஈனும் ஓர் பைங்கூழ் வேண்டும். விரைவில் செயல்படு. நினக்கு விளைநிலமாக ஓரிடத்தைத் தேர்ந்தெடுத்துத் தருவேன். அந்நிலத்தில் ஒருபோதும் குறைவு ஏற்படாது. அதுவே 'இன்சொல்' எனப்படும் நன்னிலம். இன்சொற்களாலேயே திணிந்த நிலத்தையே நினக்குத் தந்து உரிமையாக்குகிறேன். கவலற்க:

விதை

இந்நிலத்தில் விதைக்கப்படும் விதை எதுவெனக் கேட்டுத் தெரிந்துகொள். அதுதான் 'ஈதல்' என்ற பெருங்குணத்தாலான விதை. எனது ஈகைக் குணமாகிற விதையினைத் தந்த உடனேயே தாமதமின்றி விதைத்து விடு. வேறு எந்த விதையும் தேடி யலையாதே. இதை மனதில் உறுதியாகக் கொள்.

களை

இவ்விதமாக யான் தந்த விதையை வீணாக்கிவிடாதே. விதைத்த பின்னர், பக்கத்தில் முளைக்கும் களைகளைப் பிடுங்கி எறிய வேண்டும். இன்றேல் பயிர் நாசமாகிவிடும். அக்களைகள் யாவை என அறிவாய்! அவையே 'இன்சொல்' என்ற நிலத்தில் தான்தோன்றியாய் முளைத்துக் கிடக்கும் வன்சொற்கள். எப்போது கண்டாலும் உடனேயே இவற்றைக் களைந்து, கண் காணா இடத்தில் எறிந்துவிடு.

எரு

எப்பயிராயினும், எந்நிலமாயினும் எரு இடுவது சாலவும் நல்லது. எரு என்பது இயற்கையிலேயே நிலத்தில் தோன்றிய பொருள்கள், நிலத்திலேயே மக்கி ஏற்படுகின்ற சத்துக் குப்பைகளே என்பர் அறிஞர். அதுபோல, இன்சொல் எனப்படுகின்ற நிலத்தில் அவ்வப்போது அடிபட்டு அடிபட்டு வன்சொற்கள் முதலானவை யெல்லாம் களையப்பட்டு அவையெல்லாம் மக்கிக் கடைசியில் நன்ஞானத்தால் வாய்மைக் குப்பையாகக் குவிந்து கிடக்கும். அவற்றை அப்படியே நிலத்திற்கு எருவாக்கி விடு. அலட்சியப் படுத்தாதே. நல்ல பயன் கிட்டும்.

நீர்

மேற்சொன்ன அனைத்தும் இருந்த போதிலும், தண்ணீர் இல்லாவிட்டால் ஒன்றுமே இல்லை. எந்த நீரைப் பாய்ச்சினால் அறக்கதிர் ஈனுமோர் பைங்கூழ் விளையும் என்பதே கடைசியாக எழுகின்ற வினா. இதற்குச் சிறிதும் கவலற்க. என்னுள்ளிருந்து வெளிப்படும் அன்புணர்ச்சிதான் நீ செய்யும் பயிருக்கு நீராக வேண்டும். இந்த அன்புநீரைப் பாய்ச்சுவதனால் உன்னை அறியாமலேயே அறமாகிற கதிர்களை ஒளியுடன் விளைவிக்கும் பசியதோர் ஒப்புமையில் பயிர் தோன்றக் காணலாம்! அப்பயிர் எனக்கு வேண்டும். நெஞ்சமே காலந் தாழ்க்காமல் இப்போதே ஈடுபடு. உன் ஒத்துழைப்பில்தான் இப்பயிர் விளைந்தாக வேண்டும். விதைத்தால்அன்றோ அறுவடை காணமுடியும்?

இவ்வாறு மிகவும் நயம்பட, உள்ளுதொறும் தெள்ளிய அறிவு ஊட்டும் வகையில் அறநெறிச் சாரத்தில் ஓர் வெண்பாவினைக் காண்கிறோம். இதை எழுதிய முனைப்பாடியாருக்கு இனி யாங்ஙனம் நன்றி தெரிவிப்போம்!

"இன்சொல் விளைநிலமா ஈதலே வித்தாக
வன்சொற் களைகட்டு வாய்மை எருவட்டி
அன்புநீர் பாய்ச்சி அறக்கதிர் ஈன்றதோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய்."

---

# வெண்காட்டு முக்குளம்

மதுரகவி, திருமுறைச்செம்மல், வித்துவான்,
திரு. தா. ம. வெள்ளை வாரணம் அவர்கள்,
தமிழ்ப்பேராசிரியர்,
செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.



திருவெண்காடு :

கடலலை மோதும் கரையில் காட்சிக்கினிய துறைமுகமாக அன்று காவிரிப்பூம்பட்டினம் விளங்கியது. அதன் ஒரு பகுதி யாய்ச் சிறப்புற்று விளங்குவது திருவெண்காடு. இவ்வூர்க்குச் சீர்காழியிலிருந்து பேருந்தியில் போகலாம். ஆக்கூரிலிருந்து சீர்காழி செல்லும் பெருவழியில் தலைச்சங்காட்டில் இறங்கி நடந்தும் போகலாம். மாயூரமிருந்து காவிரிப்பூம்பட்டினம் செல்லும் பேருந்தியில் ஏறிச் சாயாவனம் என்ற இடத்தில் இறங்கி வடக்கே இரண்டு கல் நடந்தும் இவ்வூரை அடையலாம்.

ஊரின் தோற்றப் பொலிவு சிறிதாகக் காணப்பட்டாலும் தலச்சிறப்பு மிகப் பெரிதாக உள்ளது. கண்கவரும் கோவிலும், உள்ளங்கவரும் இறைவன் சன்னிதானமும், அகோர மூர்த்தியின் திருமேனியும் ஒரு முறை காணப்பெற்ருல் பின்னர் மறக்க முடியாது.

இத்தலத்தில் வெள்ளையானை பூசித்துப் பேறு பெற்றிருக் கிறது. இத்தலத்திற்கு மூவர் பதிகங்களும் இருக்கின்றன. சிறுத்தொண்ட நாயனரின் மனைவியார் திருவெண்காட்டு நங்கை இவ்வூரில் தான் பிறந்தனர். பட்டினத்தடிகள் வழிபட்டு மகவைப் பெற்றதும் இவ்வூரில் தான். மெய்கண்டார் அவதாரம் செய்யக் காரணமாய் இருந்ததும் இத்தலமே.

இத்தலத்தில் அகோர மூர்த்தியின் சன்னிதி மிகப் பிரசித்த மானது. தருமபுர ஆதீனத்தின் அடியார் கூட்டத்துள் ஒருவரும், மாபாடிய

கர்த்தரும் குமரகுருபர சுவாமிகளின் தமிழ் மாணக்கரும் 17-ம் நூற்ருண்டில் வாழ்ந்தவருவான ஸ்ரீமத் வெள்ளியம்பலவாணத் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் திருப்பணி செய்யப்பட்ட நடராசப் பெருமானின் திருச்சபை மிக விசேஷமானது. மேலும், அத்தலத்தின் சிறப்பை மேன்மேலும் பெருக்குபவை முக்குளங்களே யாகும்.

முக்குளம் :

திருவெண்காட்டில் சுவேத வனப்பெருமாள் திருக்கோவிலின் கிழ்புற வாயிலில் நுழைந்து சிறிதுதூரம் நடந்தால் அழகான படித்துறைகளுடன் கூடிய ஒரு திருக்குளத்தைக் காணலாம். இது அக்கினி தீர்த்தம் எனப்படும். இதன் கீழ்கரையில் அக்கினிஸ்வரர் எழுந்தருளி உள்ளார். இக்குளத்தில் நீராடி அக்கினிஸ்வரரையும் வழிபட்டுச் சற்று மேற்கே சென்ருல் தெற்குப் பிராகாரத்தில் மற்ருெரு திருக்குளம் காணப்படும். இது சூரிய தீர்த்தம் எனப்படும். இதன் கீழ் கரையில் சூரியேஸ்வரர் எழுந்தருளி உள்ளார். இக்குளத்திலும் நீராடிச் சூரியேஸ்வரரையும் வழிபட்டுத் தெற்குப் பிராகாரம் மேற்குப் பிராகாரம் இவற்றின் வழியாக வலம் வந்தால், வடக்குப் பிராகாரத்தில் அம்மன் சன்னிதிக்கு நேர் கிழக்கில் கண்ணைக் கவரத்தக்க பெரிய திருக்குளம் ஒன்றைக் காணலாம். இது சந்திர தீர்த்தம் எனப்படும். இத் திருக்குளத்தின் கீழ்கரையில் பிரம்மாண்டமான ஒரு ஆலமரம் இருக்கிறது. அம்மரத்தடியில் சந்திரேஸ்வரர் எழுந்தருளி உள்ளார். இக்குளத்திலும் நீராடிச் சந்திரேஸ்வரரை வழிபடவேண்டும்.

இம்மூன்று குளங்களும் மிகமிகப் பழைமை வாய்ந்தவை. 7-ம் நூற்ருண்டினரான ஞானசம்பந்தர் தமது திருப்பதிகத்தில் இக்குளங்களை மூன்றிடங்களில் குறித்துள்ளார். 2-ம் நூற்ருண்டில் எழுந்த சிலப்பதிகாரத்தில் இக்குளங்களைப் பற்றிய பேச்சு வருகிறது.

கண்ணகி கோவலனைப் பிரிந்து வருந்துகிருள். அவளது தோழி தேவந்தி என்பாள் பாசாண்டச் சாத்தான் கோவிலுக்குப் போய்த் திரும்பி வந்ததும் கண்ணகி மீது அறுகு, சிறுபூளை, நெல் இவற்றைத் தூவிப் ‘பெறுக கணவனெடு’ என வாழ்த்துகிருள். மேலும்,

"கடலொடு காவிரி சென்றலைக்கும் முன்றில்
மடலவிழ் நெய்தலம் கானல் தடமுள;
சோமகுண்டம் சூரியகுண்டம் துறைமுழ்கிக்
காமவேள் கோட்டம் தொழுதார் கணவரொடு
தாமின்புறுவர் உலகத்துத் தையலார்."

என்று கூறுகிருள் — இவ்விதம் சிலம்பில் கனுத்திறம் உரைத்த காதையில் பேசப்பட்டிருக்கிறது. இங்குச் சோமகுண்டம் என்பது சந்திர தீர்த்தத்தையும், சூரிய குண்டம் என்பது சூரிய தீர்த்தத்தையும் குறிக்கின்றன. மற்றென்ருகிய அக்கினி தீர்த்தத்தைக் குறிக்காமல் விட்டது, உபலக்ஷணத்தால் பெறப்படும் என்பது கருதிப் போலும். இதனுல் சங்க காலத்திலேயே இம்முக்குளம் சிறப்புப் பெற்றவை என்பது விளங்கும்.

சம்பந்தர் வாக்கு :

இத்தலத்திற்கு ஞானசம்பந்தரால் பாடப்பெற்ற பதிகங்கள் மூன்று உள்ளன. அவைகளில் முதற்பதிகத்தில் இரண்டிடங்களிலும், இரண்டாம் பதிகத்தில் ஓரிடத்திலும் முக்குளங்களைப் பற்றிய குறிப்பு வருகின்றது. ஒன்றை நோக்குவோம்.

(பண் : சீகாமரம்)

பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினேடு உள்ளநினைவு
ஆயினவே வரம்பெறுவர் ஐயுறவேண்டா ஒன்றும்
வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே.

பொழிப்புரை : மூங்கிலைப் போன்ற தோள்களையுடைய உமையொருபாகனது திருவெண்காட்டில் உள்ள முக்குள நீரில் மூழ்கும் செயலுடையவர்களைத் தீவினைகள் வந்து அணுகமாட்டா, பேய்களும் வந்து அணுகமாட்டா; (முழ்குவதற்கு முன் பேய் பிடித்திருப்பின்) அப்பேயும் பிரிந்து போகும். மேலும் அங்ஙனம் மூழ்குவார் மகப்பேற்றுடன் தம்முள்ளத்தில் நினைத்த விருப்பமான வரங்களையும் பெறுவார்கள். இவற்றில் ஒரு சிறிதும் ஐயப்பாடு உங்கட்கு வேண்டா.

இன்றும் பேய்பிடித்திருப்போர் நீராடி அது நீங்கப் பெறுவதும், பிள்ளைப் பேறு விரும்பியோர் நீராடி அது கைவரப் பெறுவதும் கண்கூடான உண்மைகளாம்.

மெய்கண்டார் அவதாரம் :

13-ம் நூற்றுண்டில் பெண்ணுகடத்தில் அச்சுத களப்பாளர் என்னும் வேளாளர் ஒருவரிருந்தார். அவர் மகப்பேறின்றி மனம் வருந்தினுர்; தனது குலகுருவாகிய அருணந்தி சிவாசாரியாரிடம் அது குறித்து விண்ணப்பித்துக் கொண்டார். சிவாசாரியரும் சிவபூசை செய்து அதன் முடிவில் திருமுறைகளையும் பூசித்துக் கயிறு சாத்திப் பார்த்தார். அப்போது சம்பந்தர் வாக்காகிய 'பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினேடு உள்ள நினைவு ஆயினவே வரம் பெறுவர்' என்ற பாடல் கிடைத்தது. சிவாசாரியார் அப்பாடற் பொருளை விளக்கி, அச்சுத களப்பாளரைத் திருவெண்காட்டு முக்குள நீராடி விரதம் இருக்கச் சொன்ஞர். குருவின் ஆணைப்படி, களப்பாளரும் தம் மனைவியுடன் வெண்காட்டிற்குச் சென்று முறைப்படி நீராடி விரதம் இருந்தார். சில திங்களில் களப்பாளரின் மனைவியார் கருவுற்ருர். பின்னர் நல்லாண் மகவும் பெற்ருர். குழந்தைக்குச் சுவேதவனப் பெருமான் என்று பெயரிட்டார்கள்.

குழந்தை மூன்ருண்டு நிரம்பித்தெருவில் சிறுதேர் உருட்டும் போது பரஞ்சோதியார் என்னும் சிவஞானியார் குழந்தைக்குச் சிவஞானேபதேசம் செய்து மெய்கண்டார் என்ற தீக்ஷா நாமமும் தந்தார்.

சிவஞானம் கைவரப் பெற்ற காரணத்தான் மெய்கண்டார்க்கு, அவரது குலகுருவான அருணந்தி சிவாசாரியாரும் மாணுக்கராயினுர். மெய்கண்டார் சிவஞான போதம் என்னும் நூல் இயற்றினுர். அதனை விளக்கும் முகமாக அருணந்தி சிவாசாரியார் சிவஞான சித்தியார் என்ற நூலை இயற்றினுர்.

முடிவுரை :

வெண்காட்டு முக்குளம் சங்ககாலத்திற்கும் முற்பட்டன என்பதும், தம்பால் நீராடின் வினை போக்கும் – பேய் நீக்கும் – பிள்ளை நல்கும் என்பதும், மெய்கண்டாரின் அவதாரத்திற்குக் காரணமாக விளங்கின என்பதும் இக்கட்டுரையிற் கண்டோம். எனவே நாமும் முக்குளத்தில் நீராடி நற்கதியில் புகுவோமாக.

---

# அருள் நூலும் அகப்பொருளும்

திரு. A. C. ஷண்முக நயினர் அவர்கள்,
அட்வகேட், தென்காசி.

[மலர் 15. இதழ் 6-ன் தொடர்ச்சி]

உலகத்தில் உயிர்கள் எல்லாம் இன்பத்தை நாடி இன்பம் விழைந்து இல்லறம் நடத்தி வருகின்றன. இக்காதல் தத்துவம் உலகத்தில் இல்லையாயின் இல்லற இன்பம் இல்லை யென்றே முடியும். நெற்றியின் வியர்வை நிலத்தில் விழ உழைத்தும் திரை கடல் ஓடியும், நீருள் முழ்கியும், வானிற் பறந்தும், போரிற் சென்று தன்னுயிரைக் கையிற் பிடித்துப் பல்லுயிரைக் கொன்றும் பாடுபட்டுப் பொருள் ஈட்டுவதெல்லாம் காதல் மனை யாளுடன் காதலின்பம் விழைந்து நல்லறமாகிய இல்லறம் நடத்தி இன்புற்று வாழவே. இந்த இன்பம் கிட்டாதாயின் உலக வாழ்வில் ஒரு சுவையுமில்லை. இனிமையுமில்லை. உப்பில்லாப் பண்டம்போல் குப்பையிற் தள்ள வேண்டியதொரு பொருளை யொக்கும். இதைவிட உயிர் வாழாதிருத்தலே நன்று. காதல் காதல் காதல் அல்லது சாதல் சாதல் சாதல் என்றார் ஒரு தற் காலக் கவிஞர். மேனாட்டுக் கவியாகிய டெனிசன் பிரபு என்ற புலவர் காதல் செய்யாமலிருப்பதைவிடக் காதல் செய்து காதற் பொருளை இழக்க நேரிடினும் இறப்பதே மேலானதாகும் என்று காதலின் உயர்வை விளக்கியிருக்கின்றார். "It is better to have loved and lost than never to have loved and lost"

காதல் செய்து காதலர் ஒற்றுமைப்பட்டு வாழ்கின்ற வாழ்வின் இனிமையும் காதல் இல்லா இல்லற வாழ்வும் நாம் கண் கூடாகவே காணலாம். இக்காலம் போலவே முற்காலமும் இருந்ததாகவே அறிகின்றோம். கருத்தொருமையுள்ள காதலரின் செம்மையான இல்வாழ்க்கையைக் காட்டும் ஓர் பழம் பாட்டு "குறுந்தொகை"யிலுள்ளது. ஒரு பெண் புளிக்குழம்பு சமைக் கின்றாள். குழம்பு அடுப்பில் கொதிக்கின்றது. அவ்வேளையில் அப்பெண் தயிர் கடைந்து கொண்டிருக்கின்றாள். அடுப்பின் மேலுள்ள குழம்பு பொங்கி வழிகின்றது. அது பாகந் தவறி

விடாது செப்பஞ் செய்ய விரைகின்ருள். விரைவில் ஆடை நெகிழ்கின்றது. தூய ஆடை. தயிர்க்கையால் ஆடையைக் கட்டி அது அழுக்குப் படிதலையும் தன் கண்ணுள் தாளிதப்புகை பாய்வதையும் கவனியாது குழம்பினைச் சமைத்துத் தயிரும் அன்னமும் பிசைந்து குழம்பும் கலந்து கணவனுக்கு இட அவன் இனிது இனிதென உண்டு மகிழ்ந்தான்.

"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கங் கழாஅ துடீஇக்
குவளை உண்கண் குய்ப்புகை கமழத்
தான்றுழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே."

என்ற அழகான பாட்டு. இப்பாட்டிலுள்ள பிறநயங்களைக் கூற இங்கு இடமில்லை இது சமயமுமில்லை; "கார்ல் மாக்ஸ்" (Karl marx) என்ற மேனுட்டு ஞானி நாடு கடத்தப்பட்டு லண்டன் நகரஞ் சென்று கதியின்றிக் கடும் பனியில் வாடினுன். அருகிலிருக்கும் மனைவியைப் பார்த்து "என் கண்ணே! உன்னைப் பனியிலும் குளிரிலும் பட்டினியோடு வருந்தச் செய்யும் நான் கொடிய பாவியல்லவா"? என்று வருந்தினுன். அவ்வுத்தமி "அன்பே தாங்கள் அருகிலிருப்பதே கணப்புத்திப் போல என் குளிரைப் போக்குகிறது. தங்கள் திருமுகக் காட்சியே நல்விருந்துபோல என்பசியைப் போக்குகிறது" என்று சொல்லித் தன் அன்பையெல்லாம் வெளியிட்டாள். காதல்தான் என்னே! இவ்வாறு ஒற்றுமையின்றி ஒரு பெண் "இருந்து முகந்திருத்தி ஈரோடு பேன்வாங்கி — விருந்து வந்ததென்று விளம்ப — வருந்திமிக — ஆடினுள் பாடினுள் ஆடிப் பழமுறத்தால் சாடினுள் ஓடினுள்" என்ருல் இல்லறமெங்கே; இன்பமெங்கே; காதல்தான் எங்கே; மனைமாட்சி எங்கே; எல்லாம் பறந்து ஒடிவிடுகின்றன. இப்பெண் பாய்ச்சலில், கூருமற் சன்னியாசம் கொள்ளுவதேமேல் அல்லவா? ஆகவே காதலின்பமே உலக இன்பத்துள்மேல்.

அஃதேபோல ஆன்ம வாழ்க்கையிலும் இறைவனைக் காதல் செய்து ஒருமைப்பட்டு இன்பந்துய்ப்பதை ஆன்ம முதிர்ச்சியுடையவர்கள் விரும்புகின்றனர். உலக வாழ்க்கையிலுள்ள காதலின்

பத்தின் துறைகள் இலக்கணங்களை ஒப்ப ஆன்ம வாழ்க்கையிலுள்ள காதலின்பத்திற்கும் துறைகள் இலக்கணங்கள் கற்பித்துத் தங்கள் காதலை வெளியிடுகின்றனர்.

இரு வாழ்க்கைகளின் குறிக்கோள் இன்பமே. இல்வாழ்கையிற்றேடுவது சிற்றின்பம். ஆன்ம வாழ்க்கையிற்றேடுவது பேரின்பம். முன்னையது அளவிலும் காலத்திலும் எல்லையுள்ளது. பின்னையது அவ்வெல்லையில்லாதது. இவ்வின்பத்தை நாடி ஐம்பொறிகளைத் தடுத்து ஐம்புலன்களையடக்கி ஆன்ம வாழ்க்கையில் முதிர்ந்து பேரின்ப நிலையையடையும் சமயத்தலைவர்கள் அகப்பொருள் பாக்கள் வாயிலாக உலகத்தார் நன்கு அறியும்படி தாங்கள் இறைவன்பாற் செலுத்தும் அன்பை காதலரின்பத்திற்கு உவமித்து அவ்வன்பின் சீரையும் இறைவனியல்பையும் விளங்க வைக்கின்றனர். இவ்வாறு விளக்குவதில் அநேக தத்துவக் கருத்துக்கள் நேர்முகமாகவும் சொல்லாமற் சொல்லியும் அமைந்து அவற்றின் பொருள் நமக்கு எளிதில் புலப்படுகின்றன. தனித்தத்துவ நூல்களில் நுழைந்து அங்குள்ள நுணுக்கங்கள் மேற் பாய்ந்து நுண்ணறிவு என்னுங் கருவியாற் போர் செய்து மறைப்பைத் தகர்த்து விளக்கம் பெறுவது யாவராலும் இயலாது. அருள் நூல்களாகிய தேவார திருவாசக திருவாய்மொழிகளைப் பயின்று பொதுவான சிவதத்துவக் கருத்துக்களின் விளக்கம் பெற்று ஒரு இனிமையுடனும் நம்பிக்கையுடனும் வாழ்வது யாவருக்கும் இயலும். இந்நூல்களைப் பயில்வதில் நமக்கே ஒரு வித இன்பம் பிறக்கின்றது. அகப்பொருளமையாப் பாக்கள் எவ்வளவு இலக்கியச் செறிவுள்ளதாயினும் என்புபோர்த்த உடம்பையொக்கும். மணமுஞ் சுவையும் குறைந்தே நிற்கும். அகப்பொருள் நூல்களிற் கூறிய காதற்றுறைகள் அவற்றின் நுணுக்கங்களையாவது பண்டைத் தமிழ் மக்கள் வகுத்ததிணைக்குரிய காதற்றுறையின் பல பிரிவுகளையாவது கூற நான் முன்வரவில்லை. பொதுவாகச் சில குறிப்புகளை மட்டும் கவனிப்போம்.

இயற்கை வளமும் செயற்கை வளமும் நிரம்பி வனப்பு மிகுந்த ஓர் பொழிலின் கண் ஒரு தலைமகனும் தலைமகளும் தனித்தனியே வந்து வேட்கை மிகுதிப்பட்டு ஒருவரை ஒருவர் காண்கின்றனர். அன்பு பிறக்கின்றது. (உழுவலன்பு) தலை

மகளை எதிர் பாராதவண்ணம் காணக் கிடைத்ததால் அவள் வனப்பு தன்னை வருத்தமுறுத்துகின்றது. சற்றேமயங்கி 'இவள் மாநில மடந்தையோ, வானில மகளோ' வென ஐயுறுகின்றான். இஃதே போல் தலைமகளுக்கும் உணர்ச்சி எழுகின்றது. எழுந்ததும் அவள் இவனைப் பொதுநோக்காக நோக்குகின்றாள். இவள் நோக்கியபின் இவள் பாரிலுள்ள ஓர் பெண்ணென அறிந்து அவள் நோக்கிய நோக்கில் ஓர் குறிப்பு அறிகின்றான். பின்பு இருவருங்கூடி அவன் அவளைப் புகழ்கின்றான். இல்லறம் நடத்துகின்றனர். பொருள் ஈட்டுவதற்காக அல்லது வேறு காரணத்திற்காகத் தலைமகன் பிரியவும் தலைமகள் தனியேயிருந்து வருந்துகின்றாள். தலைமகனுடைய குணங்கள் செயல்கள் உறுப்பு நலன்களையெல்லாம் நினைந்து உருகுகின்றாள். பின்பு தலைமகன் வரவும் கருத்தொருமையுடன் வாழ்கின்றனர். வேறு ஒருவரையும் மனதில் நினையாது உயர்ந்த கற்புடைய இவள்தான் வேறு தலைமகள் வேறு என்று அறிய முடியாதபடி ஒன்றித்து இன்பத்தில் திளைத்துத் தன்னை மறந்து விடுகின்றாள்.

உயிரானது இறைவனையடைய விழைதலும் கற்பனைத் திறனால் அவனைத் தன் மனதில் உருவகித்துத் தன்னைத் தலைமகளாகவும் இறைவனைத் தலைமகனாகவுங் கொண்டு அளவற்ற அன்பினால் மனதில் முயங்கியும் பிணங்கியும் சிற்றுயிர் விளையாடுவதுபோல அகத்தில் விளையாடி இறுதியில் அவனடி எய்தி நிலைபெற்றதும் அளவில்லாததுமான அவன் இன்பத்தில் திளைத்துத் தற்போதமிழந்து விடுகிறது. இதுவே உயிர்கள் இறுதியில் அடையவேண்டிய நிலை.

ஆகவே காதற்றுறையில் முதல் நிகழ்ச்சி, காண்டல், பின்பு ஐயம், பின்பு குறிப்பறிதல் இதன் பின் கூடி மகிழ்தல் என்பது இதுவரை கூறியவற்றால் புலப்படும். திருவள்ளுவ நாயனார் திருக்குறள் இன்பத்துப்பாலில் இம்முறையைக் கையாள்கின்றார். அகப்பொருள் நூல்களிற் கூறிய நுணுக்கங்களை விரிவுபடக் கூறிற்றிலர்.

---

(தொடரும்.)

# திருவருட்பயன் — தெளிவுரை

பண்டித வித்துவான், சைவப் புலவர், சித்தாந்த நன்மணி,
திரு. கு. சுந்தரமூர்த்தி அவர்கள்,
தமிழ்ப் பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்;

---

(மலர் 15. இதழ் 6-இன் தொடர்ச்சி)

66. வஞ்ச முடன்ஒருவன் வைத்த நிதிகவரத்
துஞ்சினனே போயினனே சொல்.

(தெ—ரை) ஒருவன் வைத்த நிதியினைப் பிறன் ஒருவன் வஞ்சித்து அதனைக் கவர வேண்டுமாயின்; ஒன்று அந்நிதிக் குரியவன் தூங்க வேண்டும்; அல்லது அவன் எங்கேயாவது போயிருத்தல் வேண்டும். இன்றேல் அதனைக் கவர இயலாது. அது போலவே அந்தமில் இன்பத்து அழிவில் வீடாகிய நிதியையும், அந்நிதிக்குரிய இறைவனையன்றிப் பெற இயலாது என்பதாம்.

இது ஒட்டணியாம். இதற்கு இங்ஙனமன்றி "வஞ்சகமாக ஒருவன் வைத்த திரவியத்தை எடுத்துக் கொள்ள (வைத்த திரவியத்தை வைத்தவன் வந்து கேட்கையில் இல்லை என்று சொல்ல) தூங்கித்தான் கிடந்தாயோ? அல்லது இல்லாமல் வேறிடம் போனாயோ? அது போல சிவன், தனு முதலன கொடுத்திருக்கவும் கொடுத்தவனே வந்து கேட்கையில் இல்லை என்று சொல்லி மறைப்பதனால் மறைத்த ஆன்மாவாவான் சிவனாகமாட்டான், அவன் அடிமையே ஆவான்" என உரைப் பாரும்[1] உளர். "துஞ்சினையோ போயினையோ சொல்" எனப் பாடங் கொள்வர் தே. ஆ. சினிவாசன் அவர்கள்.

---

[1] திரு. தே. ஆ. சினிவாசன் அவர்கள் சிந்தனையுரை.

இன்னும் இதற்கு "மெய்ஞ்ஞானியாகிய ஒருவற்கு அவர் தம் நிதியமாகிய வினையை அவரினின்றும் திருவருள் கவருதற்கு அவர் தூங்கினரோ அன்றி அவ்விடத்தைவிட்டுப் போயினரோ சொல்வாயாக என உரை கண்டு மெய்ஞ்ஞானிகளின் வினையை இறைவனே கவர்ந்து கொள்வர் என்றும், மெய்ஞ்ஞானிகளை வினையணுகாமைக்குக் காரணம் அதில் பற்றில்லாமையேயாகும்"[1] என்றும் பொருள் கூறுவாரும் உண்டு.

67. தனக்கு நிழல்இன்றும் ஒளிகவரும் தம்பம்
எனக்கவர நில்லா(து) இருள்.

(தெ-ரை) கதிரவன் உச்சியில் நிற்கும்போது தன்னுடைய ஒளி தோன்றாமல் அக்கதிரவன் ஒளியால் கவர்ந்து கொள்ளப்படும் படிகத் தூண் போல உயிர் தன்னறிவு தோன்றப் பெறாமல் திருவருளால் கவர்ந்து கொள்ளப்படுமாயின் அந் நிலையிலே மலம் இல்லாமல் போகும் என்பதாம்.

படிகத்தூண் இருளில் இருளாகியும் ஒளியில் ஒளியாகியும் இருக்கும். அது போல உயிரும் மலத்தால் பிணிப்புண்டபோது மயங்கியும், அருளால் பிணிப்புண்டபோது ஒளியாகியும் இருக்கும். கதிரவனின் ஒளி பெருகப் பெருகப் படிகத் தூணின் ஒளியும் பெருகும். அதுஉச்சியில் வரும்போது தூணின் ஒளி கதிரவன் ஒளியில் மறைந்தேவிடும். அது போலத் திருவருள் பிணிப்பு உயிர்க்குப் பெருகப் பெருக அதன் அன்பும் பெருகும். பின் அது முதிர்ந்த நிலையில் உயிர் சிவமயமாகவே ஆகிவிடும் என்பது கருத்து.

" அன்றிய பாசஇருளும் அஞ்ஞானமும்
சென்றிடும் ஞானச் சிவப்பிர காசத்தால்
ஒன்றும் இருசுடராம் அருணோ தயத்தால்
துன்றிருள் நீங்குதல் போலத் தொலைந்ததே."

என்னும் திருமந்திரச் செய்யுளும் இவ்வுண்மையை விளக்கி நிற்கும்.

---

[1] திரு. சு. சிவபாத சுந்தரம் பிள்ளை அடிக்குறிப்பு.

68. உற்கைதரும் பொற்கை யுடையவர்போல் உண்மைப்பின்
நிற்க அருளார் நிலை.

(தெ – ரை) தழற் கொள்ளியை அழகிய கையிலே உடையவர்கள், தாம் வேண்டுகின்ற பொருளை இருளில் காணலுறின் அதனை முன்னே பிடித்துக் கொண்டு தாம் பின்னே சென்று அப்பொருளைக் காண்பர். அதைப்போல இறைவனைக் காண வேண்டின் உயிர்களும் திருவருளை முன்னிட்டுக் கொண்டே அதன்வழி நின்று காண வேண்டும் என்பதாம்.

அருளைக் கொண்டே சிவத்தைக் காண இயலும் என்பது கருத்து. "நும்பின் எம்மை நுழையப் பணியே என்பாரும்" என்னும் திருமுறையும் ஈண்டு நினைவு கூர்தற்குரியதாம். உற்கை-தழற் கொள்ளி. உள்ளங்கை என்பர் சிந்தனையுரைகாரர்.

69. ஐம்புலனால் தாம்கண் டதென்றால் அதுஒழிய
ஐம்புலன்ஆர் தாம்ஆர் அதற்கு.

(தெ – ரை) ஐம் பொறிகளினால் உயிர் எவற்றையும் அறிகின்றன. அவை நீங்கினவிடத்து உயிர் எதனையும் அறியாது; ஐம்பொறிகளும் தனித்து எதனையும் அறியாது. அங்ஙனமிருக்க இறைவனைத் திருவருளின் உதவியின்றி அடையஐம்பெறிகள் தாம் என்ன வல்லமையுடையன! உயிர் தான் என்ன வல்லமையுடையது? ஒன்றுமில்லை என்பதாம்.

ஐம்புலன் ஆர்தாம் அதற்கு? தாம் ஆர் அதற்கு? எனப் பிரித்துக் கூட்டுக. அதற்கு என்பது இறைவனை அடைதற்கு என்னும் பொருள்பட நின்றது. புலன் என்பது ஈண்டு அதனை நுகர்தற்காம் பொறிகளை யுணர்த்தி நின்றது.

'கண்டதன்றால்' எனப்பாடங் கொள்வர் நிரம்ப அழகிய தேசிகர். 'கண்டகன்றால்' எனப்பாடங்கொள்வர் சு. சிவபாத சுந்தரம், தே. ஆ. சினிவாசன் ஆகியோர்.

70. தாமே தரும்அவரைத் தம்வலியினால் கருதல்
ஆமே? இவன்ஆர் அதற்கு?.

(தெ-ரை) இறைவன் தானே தன்னை உயிர்கட்குத்தரும் பெருங்கருணையாளன். அப்பெருங்கருணையாளனை உயிர்கள் தம் வலியினுல் பெற்றதென்று சொல்லுதற்கு என்ன தகுதி யுடையன! சிறிதும் தகுதியில்லை என்பதாம்.

இறைவன் தானே தன்னை உயிர்கட்குத்தருவன் என்பதைத் "தானே வந்தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும்" என்றும்; "தான்வந்து நாயேனைத் தாய்போல் தலையளித்திட்டு" என்றும்; "தந்தது உன் தன்னை கொண்டது என்தன்னை" என்றும்; "தேனாய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்தானே வந்து" என்றும் கூறப்பெறும் அருள்வாக்குகளான் உணர்க.

"தாமே தருபவரை" எனப்பாடம் கொள்வர் நிரம்ப அழகிய தேசிகரும், சிந்தனையுரைகாரரும்.

(தொடரும்)

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 15, இதழ் 6-ன் தொடர்ச்சி]

## II

## THIRUNAVUKKARASU SWAMI

(More commonly referred to as APPARSWAMI)

44. கண்காள் காண்மின்களோ - கட - னஞ்சுண்ட
        கண்டன்றன்னை
    யெண்டோள் வீசிநின்றுடும் பிரான்றன்னைக் -
        கண்காள் காண்மின்களோ.

44. Eyes of mine, gaze on Him
        Who drank the dark sea's bane,
    Eight arms He brandishes in dance,
        At him agaze remain.

---

(தொடரும்)

---

# புறமாண்பா, அகமாண்பா?

திரு. தே. ந. மகாலிங்கம் அவர்கள் எம். ஏ.,
தமிழ் விரிவுரையாளர்,
தெ. தி. இந்துக் கல்லூரி, நாகர்கோவில்.

பழங்கால மக்களுக்கும் இக்காலத்தவர்க்கும் பலவகையில் ஒற்றுமையும் வேற்றுமையும் ஒருங்கே காணப்படுகின்றன. நமது முதாதையாரும் நாமும் உண்ணும் உணவும் அணியும் ஆடையும் பலவகையில் வேற்றுமையாகக் காணப்படவில்லையா? எளிய உடையுடன், அடக்க ஒடுக்கத்துடன், அமைதியாக வாழ்ந்து காட்டியவர்கள் பழங்காலச் சான்றோர்கள். ஆனால் இன்றோ நாம் உடுத்துகின்ற ஆடைகளின் வகைகளும் அவற்றின் பல்நிறத் தோற்றமும், அளப்பரிய விலையும் நம்மைத் தரத்தில் உயர்த்துவது போன்று தாழ்த்தி விடுவதை உணரலாம். உணவு வகைகளிலும் எளிமையும் தூய்மையும் காணப்பட்டன அன்றைய நாட்களில். இன்றைய நாகரிக விருந்துகளில் காணப்படும் கறிகளின் பெயரே உண்பவர்க்குத் தெரியாமல் இருக்கிறது. மேலும் தனது கையைத்தானே நம்பாது வெளி நாட்டுக் கரண்டிகளையே நம்பி உணவை அருந்துபவர் பலர். சிற்றுண்டிச்சாலைகளில் பரிமாறப்படும் கரண்டிகள் பலரின் தொண்டைவரை எட்டிப் பார்த்து வெளிவந்தனவே. எனினும் அவற்றையே நம்பி வாழ்பவர் 'நாகரிக உணவு' உண்ணும் நனிநாகரிகரென யாவரும் கருதுகிறார்கள். புதுமையும் மறு மலர்ச்சியும் விரும்புவோர் அவற்றைப் புற வாழ்க்கையில் பெரிதும் விரும்புகின்றனர். ஆகவேதான் பழைமைதோய்ந்த சிலருடைய வெளித்தோற்றம் நாகரிகமற்றதென இப்போது குறை கூறப்படுகின்றன. பண்டெல்லாம் "உண்பது நாழி உடுப்பது இரண்டே" என்பதே வாய்பாடு. ஆனால் இப்போது இவ்வாய்பாட்டிற்கு நேர்மாறான நிலையினையே பார்க்கிறோம். மார்புக்கு

ஒரு பனியன்; பனியன் மேலே ஒரு சட்டை; அச்சட்டை மேலே ஒரு மேற்சட்டை; கழுத்திலிருந்து கீழ்நோக்கி நீளமான 'டை'. இக்காலத்தவர், பெரும்பாலும் கற்றவர், தங்கள் உடல் வடிவத்தை மேற்கூறியவாறு மறைத்து விடுகின்றனர். இவர்கள் ஆடைகளையன்றி உடலைப்பார்ப்பது எவ்வளவு அரிதோ அதனினு மரிதே அவர்களது உள்ளத்தின் உண்மைநிலையை உணருவதும். "வாக்கு மனம் ஒன்றுபட்ட வார்த்தையல்லால், வெவ்வேருய் போக்குடைய வார்த்தை பொருந்தேன்" என்று இறையுணர்வு கொண்டோர் எழிலுறக் கூறினும், உலகம் திருந்தியதாக இல்லை. தேனினுமினிய சுவைததும்பும் சொற்களும், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் சதுரப்பாடும், பொய், குறளை, படிறு, அழுக்காறு போன்ற இன்னபல குடிகொண்ட நச்சு மனத்தை நன்கு மறைத்துப் பொதுநலப் போர்வையில் தன்னலத் தையேக்கருதிச் செயல்படுவதே இன்று 'நாகரிகம்' என்றும் 'திறன்' என்றும் கூறப்படுகின்றது. அடக்கம், பணிவு, ஈர மளைந்தஇன்சொல் இவற்றையே அணிகலனுகக் கொண்டு, புற வாழ்க்கையே பொருளெனப் புரளாது, அருளும் அன்பும் தோய்ந்த அமைதியான வாழ்க்கையை விரும்பி ஒதுங்கி வாழும் நல்ல மனிதர்களையும் சமுதாயத்தில் காண்கிரும். இவர்களை வாழத்தெரியாத நனிபேதையர் என்பர் இன்றைய நனிநாகரிகர்.

நல்ல மனிதர்கள் புறவாழ்க்கையில் எளிதாகப் பெறுகின்ற புகழும் பெருமையும் சிறிதும் இல்லாதாராயிருக்கலாம். ஆனல் நற்பண்பெல்லாம் ஒன்ருன வடிவாய்த் திகழ்பவர் என்பதை மறக்க முடியாது. கடலினத்தேகாணும் முத்துப்போன்று பெருமதிப்புடையராயினும், வெளியே தெரியாமலேயே அவர் களது தனி வாழ்க்கை அமைந்து விடுகிறது. மரத்தடியின் மதிப்பு அதனுள்ளே காழ்ப்பேறிய வைரத்தின் மதிப்பைப் பொறுத்தேயாவதுபோல், இக்காலச் சமுதாயத்தின் பெருமையும் இச்சான்ருேரைப் பொறுத்ததேயாகும். சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் நன்னெஞ்சங் கொண்ட நடுநிலையாளர் இவ்வுண் மையை உணர்வர். இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டு களுக்கு முன்பே திருவள்ளுவரது தமிழ் உள்ளம் இதனை நன்கு

ணர்ந்து 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' என்று சொல்லி மகிழ்ந்தது.

புத்தரும், ஏசுபெருமானும், நபிநாயகமும், சிவனடியாரும், ஆழ்வார்களும் இப்பண்புடையார் வரிசையில் மாண்புற மிளிரும் சோதியாவர். நிலத்தோடு என்றும் நின்று நிலவும் புகழ் வாய்ந்த இப்பெரியோர், மன்னுயிர் வாழக்காட்டிய வழிவகைகளை நாம் இன்று உணருகிறோமா? உணர்ந்தால் உணர்ந்தவாறு நடக்கிறோமா? நடக்கவில்லை என்றால் அதற்காக வருந்துகிறோமா? இவற்றை ஒருகால் நினைக்கும் போது மனம் வெதும்புகிறது. ஏனெனில் மூளையின் உழைப்பு அறிவைப் பெருக்கித் தூய்மை செய்தல் வேண்டும். அவ்வாறுபெற்ற அறிவு மனத்தை மாசு மறுவற்றதாக்க வேண்டும். இந்த அறிவும் மனமும் சேர்ந்து மனிதனது ஆளுமையைப் பெரிதும் தூய்மையடையச் செய்யும். இம்மூன்று நிலைகளின் முழுநிலையடைந்தவரே மாந்தருக்குள்உண்மை மாந்தராகக் கருதப்படுவர்.

இன்று பல துறைகளிலும் மூளைவளத்தால் அறிவுபெறும் வழிவகைகள் எளிதாகக் கிடைக்கின்றன. பல்துறைக்குரிய நூற்கள் பலநாட்டு அறிஞர்களால் எழுதப்பட்டனவாக இருக்கலாம். ஆனால் அவற்றின் மொழிபெயர்ப்புக் கற்பவரின் தாய் மொழியில் கிடைக்கின்றன. அச்சுக்கூடங்களும் இயந்திரங்களும் அறிவியற்றுறையால் மலிந்துவிட்டதால் நமது வீட்டிலிருந்தே உலகை நமக்கு அறியமுடிகிறது. இந்த வாய்ப்பையும் வசதியையும் மக்கள் (கற்ற மக்களும்கூட) சரியான முறையிலே பயன்படுத்துகிறார்களா என்பதை ஒரு கணம் சிந்திக்க வேண்டும். வானொலியைத் திருப்பிச் சினிமாப் பாடல்களையே கேட்கும் நேரத்தில், நல்ல இலக்கியச் சொற்பொழிவையும் கேட்கமுடியும். அச்சொற்பொழிவிற்குரிய நிலையங்களை பலர் திருப்புகிறார்களா? நல்ல கட்டுரைகளும், சீர்திருத்தக் கருத்துக்களும் நிறைந்த மாதப் பத்திரிகைகளைப் படிப்பவர் தொகை கூடுதலா? அல்லது புலனுணர்ச்சி கிளர்ந்தெழ வாய்ப்புதரும் பத்திரிகை படிப்பவர் தொகை கூடுதலா? சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் எனப் புலனைந்தும் மனத்தை அடிமைப்படுத்தாமலிருப்பதே அறிவால் பெற்ற அரும்பயன் என்று உணர

வேண்டாமா? ஐம்பொறிகளும் புலன்விருந்தை நோக்கி ஓடாது நன்றின்பால் உய்க்கப்படல் வேண்டும் என்பார் எப்பாலும் புகழ் பெற்ற முப்பால் ஆசிரியர் திருவள்ளுவர். பல துறைபற்றிய செய்திகளைச் சேர்த்துவைக்கும் இடமாக மூளை விளங்குவதால் ஒருவன் கற்றவனல்லனென்றும், மனத்தை ஒரு நிலைப்படுத்து பவனே உண்மையாகக் கற்றவனென்றும் விவேகானந்தர் அழுத்தமாகக் கூறவில்லையா? ஆகவே புலனுணர்விற்கு மனி தன் அடிமையாகாது, மனிதனுக்கு என்று புலனுணர்வு அடிமை யாகுமோ, அன்றே கற்ற மனிதன் தான் கற்ற கல்வியால் பெரும்பயன் பெற்றான் எனலாம். இன்று ஒருவன் நடமாடும் நூல் நிலையமாகவும், அஃகியகன்ற அறிவினனாயும் திகழ்வது எளிது. ஆயின் பண்பின் சிகரமாய், ஒழுக்கத்தில் உரவோனாய், நன்மனச் சான்றோனாய் வாழ்ந்து காட்டுதல் அரிது. அதுவே மனித உயிர் இறையுணர்வு பெற்ற நிலையெனலாம்.

இவ்விறையுணர்வடைய நாம் யாது செய்தல் வேண்டும்? குறியெதிர்ப்புக் கருதாது, தன்னைப்போல பிறரையும் மதித்து, நாம் வினைசெயல் வேண்டும்; தன்னலம் மறந்து பிறர்நலம் கருதி நாம் உழைத்தால் நமது வாழ்க்கையில் தெய்வீக ஒளி வீசும். அதை நம்மால் உணரமுடியாவிடினும் பிறர் நன்கு உணர்வர். உணர்ந்தால் உளமார வாழ்த்துவர். செய்த வேலைக் கேற்ற கூலி கிடைத்தே விடும் என்பது உலகியலன்றோ! தனது வாழ்க்கையைச் சிறிதும் பொருட்படுத்தாது, தான் மெய்வருந்தப் பெற்றெடுத்த சேயின் வாழ்வில் தாய் எவ்வளவு ஈடுபாடு கொள் கிறாள்! மருத்துவர் சொற்படி, சேயின் உடல் நலத்திற்காகத் தனது நாவிற்குரிய இனிய பண்டத்தை வெறுத்து பிற உண் பதும், அதே தாய்தான்! நல்ல துணிமணிகள் தனக்குக் கிடைக் காத நிலையில் நல்குரவால் நலிந்தாலும், எழிலுடைய ஆடை களைத் தனது குழந்தைக்கு அணிவித்து மகிழ்ச்சிகொள்ளும் அத்தகைசால் பெருமாட்டியின் தெய்வீக உள்ளத்தைக் கண்டே நம்மவர் இறைவனையும் அம்மையாகக் கருதினர்போலும்!

'தாயைப்போலப் பிள்ளை நூலைப்போலச் சீலை' என்பது பழ மொழி. ஆழ்ந்த பொருள்கொண்டே இம்மொழி விளங்குகிறது. என்பதை நாம் உணர்வோம். ஈன்றதாயின் உடல்தோற்றம்

மட்டும் பெற்ற பிள்ளையிடத்தில் காணப்படும் என்பது மட்டுமே இம்மொழியில் விளங்குகிறது எனல்வேண்டாம். தன்னலமற்ற தாயின் உள்ளம்போன்று நமது செயலிலும் தன்னலம் அற்றுப் போகபோண்டும். நலிவுற்ற சேயின் பொலிவை விரும்பும் தாய் போல், நலிவுற்ற குடும்பம், சமுதாயம், நாடு போன்ற இவை பல்வகைப் பொலிவும்பெற்றுப் பாங்குற அமையும் வகையில் நமது உழைப்பு தூய்மையடைதல் வேண்டும். இதுவே இன்றைய நாகரிக உலகில் இன்றியமையாது தேவைப்படும் செல்வம் என்பதை மறக்க முடியுமா?

---

## ஸ்ரீ ராமகிருஷ்ண குடிலில் சிறுவர்களைச் சேர்த்தல்.

தமிழ் நாட்டிலுள்ள திக்கற்ற சிறுவர்களுக்காகவே இந்தத் தர்ம ஸ்தாபனம் சேவை செய்து வருகிறது. ஜாதி, மதம், கட்சி பேத மின்றி தாய் தந்தை இருவருமேயில்லாத திக்கற்ற ஏழைச் சிறுவர்களை மட்டும் 5 வயது முதல் 10 வயது வரை எடுத்துக் கொள்ளப்படுகிறது அவர்களுக்காகவே ஆரம்பக் கல்வி முதல் உயர்நிலைக் கல்வி வரையில் ஆதாரப் பள்ளிகளும், பலவகை தொழிற் பிரிவுகளும் இங்கு நடத்தப் பெற்று வருகிறது. அவர்களுக்கு உணவு, உடை, இருப்பிட வசதி, கல்வி, தொழிற் பயிற்சி ஆகிய அத்தியாவசியத் தேவைகள் அனைத்தும் முற்றும் இலவசமாகவே ஹைஸ்கூல் படிப்பு முடியும் வரையில் அளிக்கப்படுகிறது.

இது சமயம் தமிழ் நாட்டின் பத்து மாவட்டங்களிலிருந்தும் வந்து சேர்ந்துள்ள சிறுவர்கள் சுமார் 300 பேர் வித்யாலயம், குரு குலத்தில் புகலிடம் பெற்று வாழ்ந்து வருகிறார்கள், மேலும் அத்த கைய நிலையிலுள்ள சிறுவர்கள் எத்தனை பேர் நாட்டியிலிருப்பினும் அவர்களுக்கெல்லாம் புகலிடம் அளிப்பதே ஸ்தாபனத்தின் லட்சியம். இங்கு வருஷத்தில் எந்தக் காலத்திலுமே சிறுவர்களை எடுத்துக் கொண்டுதான் வருகிறோம். ஆனால் விசேஷமாக ஜூன் மாதத்தில் தான் பெரும்பாலோர் குழந்தைகளைப் பள்ளியில் சேர்க்கும் காலம் என்று கருதிக்கொண்டு இருக்கிறார்கள். ஷை நிலையிலுள்ள சிறுவர்களை இங்கு சேர்க்க விரும்புவோர் இப்பொழுதிலிருந்தே முயற்சியெடுத்துக் கொள்வது நலமாகும். முழு விவரம் வேண்டுவோர் முதலில் கடிதம் எழுதி அதற்குரிய அச்சுப்பாரங்களைப் பெற்றுக் கொள்ளலாம்.

ஸ்ரீ ராமகிருஷ்ண குடில்,
திருப்பராய்த்துறை, திருச்சிராப்பள்ளி.

# தாயுமானவரின் – பராபரக்கண்ணிகள்

**Couplets in venerable adoration of the Omnipotent and Omnipresent**

sung by

**St. THAYUMANAVAR**

**11**

The soul must be purified from all the impurities Then it starts with the spritual awakening and reaches the state of perfect Bliss. If the soul is pure, pious, and God-Conscious, it will readily get the motherly treatment from God. In the following couplet our poet-saint asserts such ardent devotees are like children in the cradle of comforts.

கெட்டியென்றுன் அன்பர்மலங் கெட்டயர்ந்தோர் பூரணமாம்
தொட்டிலுக்குட் சேய்போல் துயின்ருர் பராபரமே.

(பொ – உரை) ஞான சாதனையில் மிகச் சமர்த்தர் என்று சொல்லப்பட்ட தேவரீரது அன்பர் ஆணவ மல சம்பந்தம் ஒழியப் பெற்று அயர்ந்து ஒப்பற்ற பரிபூரண நிலையாகிய தொட்டிலிலே (சிவ ராஜ யோகானுபவ நித்திரையிலிருந்து) பாலர் போன்று துயின்ருர்கள்.

Oh............Lord Supreme! I know your beloved devotees, the conquerors of the spritual field, who are free from all malas (earthly ambitions and environments) are enjoying their rest in an unique and perfect state of blissfullness like the innocent and guileless child in the cradle.

(தொடரும்)

---

Translated by Sri. K. PALANISAMY, M.A., Lecturer in Tamil, Sri. K. G. S. Arts College, Arulnandi Nagar.

SAINT APPAR AND HIS HYMNS

அப்பர் சுவாமிகளின்

# அற்புதத் திருப்பதிகங்கள்

ஆங்கில மொழிபெயர்ப்பு

திரு. T. B. சித்தலிங்கம் அவர்கள், M. A.,

தமிழ் விரிவுரையாளர்,

காசி இந்துப்பல்கலைக்கழகம், காசி.

திருப்புகலூர் திருத்தாண்டகம் 6-ம் திருமுறை

எண்ணுகேன் என்சொல்லி எண்ணுகேனோ எம்பெருமான்
 திருவடியே எண்ணின் அல்லால்
கண்ணிலேன் மற்றோர் களைகண் இல்லேன்
 கழலடியே கைதொழுது காணின் அல்லால்
ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்
 ஒக்க அடைக்கும்போது உணர மாட்டேன்
புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன்
 பூம்புகலூர் மேவிய புண்ணி யனே.

"I Know not what to say. I think not but Thy Holy Feet, my Lord. I think not of others; nor do I have any help but to see through the worship of Thy Feet. Thou hast made my mortal coil with nine openings. I will not know when they cease to function together. O my Lord at Pugalur, I enter Thy Feet."

St. Appar found rest at the Feet of the Lord of Tiruppugalur, after a long and arduous journey of life.

SIVA SIVA

# Sri Kumaragurupara Swamigal Memorial Day Feeding Charity at New Delhi

## CAPITAL Rs. 5000/-



This endowment is founded by His Holiness **Silasri Kasivasi Arulnandi Tambiran Swamigal Avergal,** Head of Sri Kasimutt, Tirupanandal in revered memory of Sri Adi Kumaragurupara Swamigal (Founder of Kumaraswami Mutt at Banaras) who, by the blessings of Sri Senthilandavan, got the power of speech in his 5th year and sang "**Kandarkalivenba**", who was honoured by being garlanded by Goddess Meenakshi with a pearl necklace at Madurai for his inspired songs in Her praise (Meenakshi Ammai Pillai Tamil), who composed "Neethinerivilakkam" at the request of King Tirumalai Naik for inculcating worldly wisdom to the rich and the poor, who was initiated by Sri Masilamani Desikar in the saintly order of the Dharmapuram Adhinam, who sang "Pandaramummanikkovai" in praise of that Pontiff, who visited the holy shrines of Vaithiswarankoil, Chidambaram, and Tiruvarur and sang "Muthukumaraswamy Pillai Tamil" "Mummanikkovai" and "Nanmanimalai" respectively, who made a pilgrimage to Banaras, who graced the Tamil world with his "Sakalakalavallimalai" and rode on a lion when he interviewed the Padusha during the reign of Aurangazeb and who erected Kedar ghat, and Kedareeswarar Mandir in the West bank of the Ganges, for conducting feeding charity on his annual memorial day viz. Vaikasi Amarapaksham Thrithiyai

at the Sri Swaminatha Swami Mandir now being constructed at the hillock at Ramakrishnapuram near Modi-Bagh, New Delhi, for which the following endowments have already been instituted:

1. Thevara endowment at the Sri Vinayaka and Subramania Mandirs New Delhi - Landed property worth Rs. 80,000/-

2. Provision for a Panda at Swaminatha Swami Mandir, New Delhi - Landed property worth Rs. 30,000/-

.This endowment shall be styled "Sri Kumaragurupara Swamigal Memorial Day Feeding Charity" at New Delhi.

2. This endowment consists of Government Promissory Note to the face value of Rs. 5000/- invested in 3% Conversion Loan of 1946 fetching interest at 3% per annum G. P. Note No. CA 244573 for Rs. 5000/- The administration of the fund shall vest in the Donor and his Successors-in-interest.

2. (a) Similar endowments have been created by the Donor in the following 42 places all over India from Kanyakumari on the South to the Himlayas in the North for the same purpose:—

| | Rs. | | Rs. |
|---|---|---|---|
| 1. Kanyakumari | 7,000 | 10. Palani | 10,000 |
| 2. Rameswaram | 10,000 | 11. Viralimalai | 5,000 |
| 3. Utharakosamangai | 5,000 | 12. Tiruvanaikka | 7,000 |
| 4. Tiruchendur | 5,000 | 13. Tirupperunthurai (Avudayar koil) | 5,000 |
| 5. Srivaikuntam | 9,000 | 14. Tiruvaiyaru | 6,000 |
| 6. Tirunelveli | 5,000 | 15. Swamimalai | 7,000 |
| 7. Tirukkutralam | 5,000 | 16. Tiruvidaimarudur | 5,000 |
| 8. Old Papanasam | 5,000 | 17. Tirupanandal | 100,000 |
| 9. Madurai (Kanayakumari etc. Charities) | 25,0000 | 18. Vedaranyam | 5,000 |

| | Rs. | | Rs. |
|---|---|---|---|
| 19. Tiruppugalur | 5,000 | 31. Kancheepuram | 7,000 |
| 20. Tiruvarur | 7,000 | 32. Tirukkazhukundram | 7,000 |
| 21. Tirunallar | 5,000 | 33. Madras | 5,000 |
| 22. Kaveripoom-pattinam | 5.000 | 34. Tiruvotriyur | 5,000 |
| 23. Akkur | 5,000 | 35. VadaThiruvalangadu | 5,000 |
| 24. Mayuram | 10,000 | 36. Thiruthanigai | 7,000 |
| 25. Vaitheeswarankoil | 7.000 | 37. Kalahasti | 7,000 |
| 26. Sirkali | 5.000 | 38. Prayag | 5,000 |
| 27. Achalpurm | 5,000 | 39. Varanasi | 10,000 |
| 28. Chidambaram | 20,000 | 40. Haradwar | 8,000 |
| 29. Tirukkovalur | 5,000 | 41. Rishikesh | 7,000 |
| 30. Tiruvannamalai | 7,000 | 42. Kedarnath (Himalayas) | 7,000 |

3. The annual interest derived from the fund shall be utilised for feeding of Brahmins, Sadhus and poor on the Sri Kumaragurupara Swamigal's memorial day viz. Vaikasi Amarapaksham Thrithiyai at Sri Swaminatha Swami Mandir on the hillock at Ramakrishnapuram, near Modi-Bagh, New Delhi according to the budget (Thittajaptha) prepared each year which will depend upon the prices then current.

4. The feeding shall be arranged and conducted every year by the Donor and his Successors-in-interest.

5. This endowment shall not be diverted to any other purpose than that mentioned herein above. The fund shall stand in the name of the Donor and his successors in interest. If the Endowment amount is repaid by the Government it should be invested in highest interest yielding Government Securities.

Tirupanandal
Dated 24-2-1964. } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

---

' Registered at Tiruvadamarudhur Sub-Registrar's office on 26-2-1964 as No. 14, of 1964 of Book 4 volume 50, pages 263 to 265.

## கலைக்கோயிலில் வரப்பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 10321 & 22 | இந்துமத பாலபாடம் | தருமபுர ஆதீனம் வெளியீடு |
| 10323 | பாண்டி நாட்டுத் தலங்கள் | ,, ,, |
| 10324 | குருமகா சந்நிதானங்களின் அற்புதங்களும் அருள் [வரலாறுகளும் | ,, ,, |
| 10325 & 26 | சீகாழித் தலவரலாறு | ,, ,, |
| 10327 to 35 | நம்பியாண்டார் நம்பி அருளிய திருத்தொண் [டர் திருவந்தாதி | ,, ,, |
| 10336 | சமய குரவரும் சந்தான குரவரும் | ,, ,, |
| 10337 | திருக்கச்சியேகம்பத் திருப்பதிகங்கள் | ,, ,, |
| 10338 | ஸ்ரீலஸ்ரீ சச்சிதானந்த தேசிகர் மாலை | ,, ,, |
| 10339 | இராமேசுவர யாத்திரை | ,, ,, |
| 10340 | காசி யாத்திரை | ,, ,, |
| 10341 | சகலகலாவல்லி மாலை, மூலம் | ,, ,, |
| 10342 | பழனி தண்டாயுதபாணி தோத்திரங்கள் | ,, ,, |
| 10343 | திருக்குறுக்கைத் தலவரலாறு | ,, ,, |
| 10344 | சைவத்தின் மறுமலர்ச்சி | ,, ,, |
| 10345 | அப்பர் சுவாமிகள் அற்புத விளக்கம் | ,, ,, |

| | | | |
|---|---|---|---|
| 10346 | சிவபோகசாரமும் சொக்கநாத வெண்பாவும் | தருமபுர ஆதீனம் | வெளியீடு |
| 10347 | சைவா நுட்டான அகவல்; சிவபூசை அகவல் | ,, | ,, |
| 10348 | திருக்கைலாய யாத்திரை | ,, | ,, |
| 10349 | திருக்கடவூர்த் திருப்பதிகங்கள் (தேவாரம், திருப்புகழ்) | ,, | ,, |
| 10350 | நவராத்ரி | ,, | ,, |
| 10351 | திருவாரூர் மும்மணிக்கோவை (விரிவுரையுடன்) | ,, | ,, |
| 10352 | தாயுமானவர் மடல் (குறிப்புரையுடன்) | ,, | ,, |
| 10353 | சாத்திரங்களும் தோத்திரங்களும் | ,, | ,, |
| 10354 | நீதிநெறி விளக்கம் | ,, | ,, |
| 10355 & 56 | செந்தமிழ்ப் பூம்பொழில் | ,, | ,, |
| 10357 | திருக்கேதார யாத்திரை | ,, | ,, |
| 10358 | கலைக்கூடம் – தஞ்சை கலைவிழா சிற்ப மடல் | ,, | ,, |
| 10359 & 60 | நால்வர் நான்மணி மாலை | ,, | ,, |
| 10361 | மூன்றும் தொகுதி பண்டார மும்மணிக் கோவை (ஆராய்ச்சியுடன்) | ,, | ,, |
| 10362 | அறிவுரைப் பூம்பொழில் | ,, | ,, |
| 10363 | அப்பர் சுவாமிகள் புராணம் | ,, | ,, |
| 10364 | ஸ்ரீலஸ்ரீ கயிலைக்குருமணி கனகாபிஷேகம் | ,, | ,, |
| 10365 | தருமை கனகாபிஷேக விழாமலர் | ,, | ,, |
| 10366 | பண்டார சாத்திரம் (முதற்றொகுதி) | ,, | ,, |

| | | | |
|---|---|---|---|
| 10367 to 69 | ஞானாவரண விளக்கமும் மாபாடியமும் | தருமபுர ஆதீனம் | வெளியீடு |
| 10370 | சமயபோதச் சொற்பொழிவுகள் | ,, | ,, |
| 10371 | முத்தி நிச்சயப் பேருரை | ,, | ,, |
| 10372 | சோமவார விரதம் | ,, | ,, |
| 10373 | திருநீறு | ,, | ,, |
| 10374 | ஐந்தெழுத்து | ,, | ,, |
| 10375 | உருத்திராக்கம் | ,, | ,, |
| 10376 | இன்பம் | ,, | ,, |
| 10377 to 83 | ஸ்ரீ குருஞான சம்பந்தர் அருள் வரலாறு | ,, | ,, |
| 10384 to 92 | திருமுறை மணிகள் (தேவாரத் திரட்டு) | ,, | ,, |
| 10393 | திருவலிதாயம் திருப்பதிகம் | ,, | ,, |
| 10394 | திருவூறல் திருப்பதிகம் | ,, | ,, |
| 10395 | திருவிற்கோலத் திருப்பதிகம் | ,, | ,, |
| 10396 | திரு இலம்பையங்கோட்டூர்த் திருப்பதிகம் | ,, | ,, |
| 10397 | திரு ஓத்தூர் திருப்பதிகம் | ,, | ,, |
| 10398 & 99 | திரு விராமேச்சுரத் திருப்பதிகங்கள் | ,, | ,, |
| 10400 | திருக்கயிலாயத் திருப்பதிகம் | ,, | ,, |
| 10401 | திருமாகறல் திருப்பதிகம் | ,, | ,, |
| 10402 | திருக்குரங்கணில் முட்டம் திருப்பதிகம் | ,, | ,, |

---

(தொடரும்)

## திருப்பனந்தாள் — ஸ்ரீ காசி மடம்

# ‘ திருமுறை வெளியீடுகள் ’



| | | | ரூ | ந. பை |
|---|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை (அச்சில்) | ... | | |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | ... | 3 | 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 | 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும் புதிய பதிப்பு) | ... | 2 | 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, ,, | ... | 2 | 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் ,, | ... | 1 | 30 |
| 7* | திருவாசகம் ,, | ... | 0 | 56 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) | ... | 2 | 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலம்மட்டும்) | ... | 0 | 56 |
| 10* | திருமந்திரம் ,, (புதிய பதிப்பு) | ... | 2 | 25 |
| 11* | பதினோராந்திருமுறை ,, ,, | ... | 1 | 50 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 | 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் | ... | 0 | 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) | ... | 3 | 00 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு (அச்சில்) | ... | | |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) | ... | 3 | 00 |
| 17 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) | ... | 1 | 75 |
| 18 | கந்தபுராணம் — முதல் மூன்று காண்டங்கள் ,, | ... | 2 | 75 |
| 19 | ,, யுத்த தேவகாண்டம் ,, | ... | 2 | 00 |
| 20 | ,, தக்ஷகாண்டம் ,, | ... | 1 | 50 |
| 21 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் | ... | 0 | 25 |
| 22 | கந்தரனுபூதி | ... | 0 | 13 |
| 23 | கந்தர் கலிவெண்பா — ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் | ... | 0 | 37 |
| 24 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் | ... | 0 | 10 |
| 25 | கந்தர் கலிவெண்பா - மூலமும் — உரையும் | ... | 0 | 37 |
| 26 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 | 50 |
| 27 | சகலகலாவல்லிமாலை — ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 | 06 |
| 28 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 | 50 |
| 29 | திருக்குறள் — பொருட்பால் ,, | ... | 2 | 50 |
| 30 | திருக்குறள் — காமத்துப்பால் ,, | ... | 1 | 00 |
| | ௸ 28, 29, 30 திருக்குறள் 3 புத்தகமும் | ... | 4 | 00 |
| 31 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... | 0 | 75 |
| 32 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 | 13 |

| | | |
|---|---|---|
| 33 | முதுமொழி மேல்[illegible]ப்பு (குறிப்புரையுடன்) | ... 0 75 |
| 34 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... 0 37 |
| 35 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனுட்சியம்மை இரட்டைமணி மாலை- மதுரை மீனுட்சியம்மை குறம் | ... 2 75 |
| 36 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... 1 25 |
| 37 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை- தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... 1 00 |
| 38 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... 1 00 |
| 39 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... 0 75 |
| 40 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... 0 50 |
| 41 | பெரியபுராணம் – உரைநடை | ... 2 00 |
| 42 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... 2 25 |
| 43 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... 0 50 |
| 44 | திருக்கயிலைத் திருமுறை | ... 0 37 |
| 45 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... 0 19 |
| 46 | செந்திலாண்டவன் மகிமை | ... 0 13 |
| 47 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... 1 37 |
| 48 | ஷ ஷ பொருட்பால் 2-ம் பதிப்பு | ... 2 75 |
| 49 | ஷ ஷ காமத்துப்பால் ஷ | ... 1 20 |
| 50 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... 0 50 |
| 51 | மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... 0 50 |
| 52 | கந்தரனுபூதி-தெளிவுரையுடன் | ... 0 35 |
| 53 | திருவாரூர்-திருப்பனுவல்கள் | ... 0 10 |
| 54 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி | ... 0 10 |
| 55 | பழமொழித்திருமுறை | ... 0 25 |
| 56 | திருவாரூர் நான்மணிமாலை | ... 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள், "தியாகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோவில்தெரு, திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- • இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 47, 48, 49) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் - '64.